

"என்னே அழகிய பற்கள்!"

என்று அவள் தோழிகள் அதிசயித்தனர்



. . . ஆனால் பல்வைத்தியர் "நீ இப்பற்களையெல்லாம் இழக்கவேண்டியதுதான்!" என்றார்.

ஈறுகளை கவனிக்காததன் காரணமாக ஈறு வியாதிகள் ஏற்பட்டால், உங்கள் பற்கள் எவ்வளவு அழகாயிருந்தாலும் அவைகளை நீங்கள் இழக்கநேரிடும். ஆகையால் எப்பொழுதும் எஸ். ஆர். டூத்பேஸ்ட் உபயோகித்து ஈறுகளை உறுதியாகவும் ஆரோக்கியமாகவும் வைத்துக்கொள்ளுங்கள். அதில் பல்வைத்தியர்கள் ஈறுகளை திடமாக்கி நோயற்றதாகச்செய்ய உபயோகிக்கும் ஸோடியம் ரிஸினொலியேட் அடங்கியிருக்கிறது. பற்களை எஸ். ஆர். பளிச்சென்று வெண்மையாகவும், நோயற்றதாகவும் இருக்கச்செய்கிறது.

## • உங்கள் பற்களைக் காப்பாற்ற ஈறுகளை பாதுகாத்துக்கொள்ளுங்கள்




கிப்ஸ்

# எஸ். ஆர். டூத்பேஸ்ட்

GSR 11-23-19 TM

D. & W. GIBBS LIMITED, LONDON, ENGLAND

எப்பொழுதும் எல்லா சீதோஷ்ண நிலைகளிலும்

இருமல்
ஜலதோஷம்




இவைகளை
குணப்படுத்த

# ஸிரோலின்

"ரோச்"

உலகமெங்கும் உபயோகிக்கப்படுகிறது




# மிகவும் ருசிகரமானது மாத்திரமல்ல- இது நல்லது

புஷ்டியளிக்கும் பதார்த்தங்கள் நிறைந்தது!

போர்ன்-விட்டாவில் 95 சதவிகிதம் எலும்பு வளர்ச்சிக்கும் ஜீவசக்தி யளிப்பதற்குமான சக்குகள் இருக்கின்றன. தவிர அது ருசியாகவும் ஜீர்ணத்துக்கு தூண்டுகோலாகவும், எளிதில் ரத்தத்துடன் சேர்ந்து புஷ்டிதருவதாகவும் இருப்பதால் குறிப்பாக கர்ப்பிணிகளுக்கும் வியாதிக்குப்பின் குணமடையும் தருவாயிலும் இன்றியமையாத உணவாக விளங்குகின்றது.

## காட்பரீஸ்

# போர்ன்-வீடா

காலஷியம் விடமின்கள் நிறைந்தது

காட்பரி என்பது சிறந்த ரகத்துக்கு அறிகுறி

சாம்பிள் கிடைக்காவிட்டால் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்:—
காட்பரி-ப்ரை (எக்ஸ்போர்ட்) லிட், (Dept 22 ) தபால் பெட்டி 1417-பம்பாய்.

# அறிவிப்பு

எமது டாக்டர், குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டி நிபுணர், கீழ்க்கண்ட இடங்களுக்கு குறிப்பிட்டுள்ள தேதிகளில் விஜயம் செய்கிறார். வேண்டுவோர் அவசியம் நேரிடக் கண்டு யோசனைகள் கேட்டுக் கொள்ளலாம்.

**ஆலோசனை நேரம் காலை 9 மணி முதல் 11 வரை**
**மாலை 3 மணி முதல் 5 மணி வரை**

| இடம் | தேதி | விலாசம் |
|---|---|---|
| காஞ்சிபுரம் | 24-1-48 | Dr. T. K. நடேசன், சாலைத் தெரு, பெரிய காஞ்சிபுரம். |
| வேலூர் | 26-1-48 | மெஸர்ஸ். V. P. சிவம் & கோ., கெமிஸ்ட்ஸ், லாங் பஜார். |
| காரைக்குடி | 27-1-48 | A. V. & சன்ஸ், டிராவலர்ஸ் ரெஸ்ட் ஹவுஸ். |
| தேவகோட்டை | 28-1-48 | மெஸர்ஸ். மீனாக்ஷி ஸ்டோர்ஸ். |
| மதுரை | 30, 31-1-48 | மெஸர்ஸ். T. N. C. நாகலிங்கம் பிள்ளை & சன்ஸ், வடக்கு சித்திரை வீதி. |
| திருவனந்தபுரம் | 2, 3-2-48 | சச்சிவோத்தம சர் C. P. ராமசாமி அய்யர் சத்திரம் (ரயில்வே ஸ்டேஷன் சமீபம்) |
| தென்காசி | 4-2-48 | மெடிகல் ஸ்டோர்ஸ். |
| திருநெல்வேலி | 5, 6-2-48 | சந்திரவிலாஸ் ஹோட்டல், திருநெல்வேலி ஜங்ஷன். |
| விழுப்புரம் | 8-2-48 | C. குபேந்திர செட்டி, ஜெனரல் மர்ச்சண்ட். |
| கடலூர் | 10-2-48 | மெஸர்ஸ். கமலா & கோ., புதுப்பாளையம். |
| சிதம்பரம் | 11-2-48 | ஸ்ரீ நடராஜா டிஸ்பென்ஸரி. |
| மாயவரம் | 12-2-48 | ராமகிருஷ்ணா வைத்யசாலை, கிருஷ்ணராயர் சந்து. |
| திருவாரூர் | 13-2-48 | டிராவலர்ஸ் ரெஸ்ட் ஹவுஸ் (ஸ்டேஷன் சமீபம்) |

குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டி வியாதிகளுக்கு

**ஜம்பியின் "லிவர்க்யூர்"**

## ஜம்பி வெங்கட்ரமணய்யா & சன்ஸ்

மதராஸ், திருச்சி—மற்றும் பிராஞ்சுகள்

# கோல்கேட்

சுவாசத்தையும் பற்களையும் சுத்தப்படுத்துகின்றது

உங்களது பற்களை கோல்கேட் முறையால் தினசரி இரண்டு முறை சுத்தம் செய்யுங்கள்.

- பற்களை வெண்மையாகவும் உறுதியாகவும் இருக்கச் செய்கிறது. சொத்தையாவதைத் தடுக்கிறது.
- ஈறுகளை ஆரோக்ய நிலையிலும் வலுவாகவும் வைக்கிறது. பயோரியாவினின்றும் காப்பாற்றுகிறது.
- வாயை சுத்தமாகவும் புதுமையாகவும் செய்கிறது. துர்நாற்றத்தை அறவே ஒழிக்கிறது.

கோல்கேட் பவுடரோ அல்லது கிரீமோ
உங்கள் இஷ்டப்படி வாங்கிக்கொள்ளலாம்









## சாப்பிட மிகவும் இனிமையானது

ருசிகரமான சாக்லேட்டின் வாசனையை ஒத்திருக்கும் ப்ருக்லாக்ஸை குழந்தைகளும் வளர்ந்தவர்களும் விரும்புகிறார்கள். ப்ருக்லாக்ஸ் வயிற்றில் கிளர்ச்சி ஏற்படுத்தாமல் மலச்சிக்கலுக்கு மூலஸ்தானமான குடலினுள் சென்று பாதையை நீக்கி உங்களுக்கு இரவு முழுவதும் அதிக ஆஸ்வாச மளிக்கிறது.

# ப்ருக்லாக்ஸ்

சாக்லெட் லாக்ஸெடிவ்

பெரிய சைஸ் டின் ஒன்றுக்கு 1-12-0 சிறிய சைஸ் டின் ஒன்றுக்கு 0-12-0
எங்கும் கிடைக்கும்

சென்னை மாகாணத்துக்கு விற்பனை ஏஜெண்டுகள்:
ஓரியண்டல் மர்க்கன்டைல் ஏஜன்ஸி, 99-A, அரமனைக்காரத் தெரு, மதராஸ்




# Nutritious food..

## the nation's demand...

புஷ்டியுள்ள ஆகாரம், காற்றும், தண்ணீரும் போன்றே உயிர் வாழ்வதற்கு இன்றியமையாதது. ஆனால் பெண்மணிகளின் சரும - ஆகாரத்திற்கு இதைவிட முக்கியமானது மலபார் லிம்டா. அவளது அழகைப் பாதுகாப்பதில் இது அபாரமாக உதவுகிறது.

இதன் நுரை சருமத்திற்குள் வெகு தூரம் சென்று அசுத்தங்களைப் போக்கி, சருமத்தை மிருதுவாக்கி, உங்களுக்கு அலாதி மேனி அழகு அளிக்கிறது. உங்களுக்கு ஏற்ற சோப் அதுவே.






மலபார்

# லிம்டா சோப்

வெஜிடபில் சோப் ஒர்க்ஸ்

கள்ளிக்கோட்டை

ப்ரொப்ரைடர்ஸ்: சேட். N.P. & கோ. கள்ளிக்கோட்டை ... பம்பாய் 2 சென்னை 1,

# கல்கி

## பொருளடக்கம்


மலர் 7 | இதழ் 28 — ஜனவரி 25 — சர்வசித்து ௵ தை 12






இந்த ஆண்டில் மதுரைமா நகரில் தமிழ்த் திருநாள் நடத்துவது பொருத்தமாயிருக்கும் என்று யோசனை செய்யப்பட்டபோது, "நல்ல யோசனைதான்! ஆனால் மதுரைக்காரர்கள் நாலு பேரைக் கேட்டுப் பார்க்கலாம்!" என்றார் கல்வி மந்திரி. அப்படிக் கேட்டுப் பார்க்கப்பட்ட நாலு பேரும் நமது அட்டைப் படத்தில் காட்சியளிக்கிறார்கள். இவர்களிடம் "மதுரையில் தமிழ்த்திருநாள் நடத்தலாமா?" என்று கேட்டதற்கு, "ஆம்; பேஷாக நடத்தலாம். 'நடத்தலாம்' என்ன? நடத்தத்தான் வேண்டும்! மதுரையிலேதான் நடத்த வேண்டும்! அவசியம் நடத்தியே யாகவேண்டும்; வேறு இடம் பார்ப்பதா? ஓகோ! மதுரைக்காரர்களை யார் என்று நினைத்தீர்கள்? எங்கே,— வேறு இடத்தில் நீங்கள் தமிழ்த் திருநாள் நடத்துவதைப் பார்த்து விடலாம்!" என்று சொல்லி, உடனே ஒரு வரவேற்புச் சபையை நிர்மாணித்தது, "மதுரையில் இந்த ஆண்டு தமிழ்த் திருநாள் நடக்கும்!" என்று பத்திரிகையிலும் வெளியிட்டு விட்டார்கள். அந்த நாலு பேருமே வரவேற்புக் கழகத்தின் காரியதரிசிகளாகவும் இருந்து திருநாளை மிகச் சிறப்பாக நடத்தி வைத்தார்கள்.




நாலு காரியதரிசிகளில் ஸ்ரீ என். எம். ஆர். சுப்பராமன் எம். எல். ஏ., ஸ்ரீ என். கிருஷ்ணசாமி பாரதி (அரசியல் நிர்ணய சபை அங்கத்தினர்) ஆகிய இருவரையும் பற்றி நேயர்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. பல பொதுக் காரியங்களின் பொறுப்பை ஏற்றுள்ள மேற்படி இரு தேசத் தொண்டர்களின் பாரத்தைப் பெரிதும் தாங்கள் ஏற்றுக் கொண்டு தமிழ்த் திருநாள் சம்பந்தமான காரியங்களை நன்கு நடத்தி வைத்த மற்ற இரு காரியதரிசிகள் ஸ்ரீ ஜி. வி. ராதாகிருஷ்ணன், ஸ்ரீ பழனியப்பன் ஆகியவர்கள். காரியதரிசிகள் நால்வருக்கும் தோன்றாத் துணையாகவும், பக்கபலமாகவும் இருந்து ஊக்கம் ஊட்டி உற்சாகம் அளித்துக் கொண்டு வந்த வரவேற்பு சபைத் தலைவர் ஸ்ரீ பி. டி. ராஜன் அவர்கள் நமது படத்திலும் அந்தர்யாமியாக விளங்குகிறார்.

இவ்வருஷம் ஜனவரி 1உ 2உகளில் மதுரையில் நடந்த தமிழ்த் திருநாள், தமிழ் மொழி வளர்ச்சியின் சரித்திரத்தில் சிறப்பாகக் குறிப்பிடவேண்டிய முக்கிய நிகழ்ச்சியாகும். அந்தத் திருநாளை அவ்வளவு சிறப்புடன் நடத்தி வைத்த மதுரைத் தமிழன்பர்களின் பெயர்களும் அந்த சரித்திரத்தில் இடம் பெற்று விளங்கும் என்பதில் ஐயமில்லை.




மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 26

# என்ன சேதி?

## வீரப் போர் முடிந்ததா?

சமரசம் ஏற்பட்டிருக்கிறது. இருந்தாலும் சங்கடம் தீர்ந்தபாடில்லை. எந்த ஜனநாயகத்தைக் காப்பாற்றுவதற்காகச் சென்ற மகாயுத்தம் நடந்ததாய் வல்லரசுகள் கூறுகின்றனவோ, அதே ஜனநாயகத்தைக் காப்பாற்றுவதற்காக இந்தோனேஷியா சென்ற இரண்டரை வருஷங்களாக வீரப்போர் புரிந்தது. ஜப்பானின் யுத்த வெறிக்கு இலக்காக நேர்ந்த இந்தோனேஷியா, ஹாலந்தின் ஏகாதிபத்திய வெறிக்கும் ஆளாக நேர்ந்திருக்கிறது. "ஜனநாயக" வல்லரசுகள் உதவி புரியாமல் இருந்திருக்குமாயின், ஜப்பான் தோல்வியடைந்தபின் இந்தோனேஷியாவில் டச்சுக்காரர்கள் பிரவேசிக்கவே முடிந்திராது.

அரசியல் தர்மத்தை அடிப்படையாகக் கொண்ட இந்தோனேஷியக் குடியரசுக்கும் ஆயுத பலத்தை அடிப்படையாகக் கொண்ட டச்சு ஏகாதிபத்தியத்துக்கும் முப்பது மாதங்களாக நடந்து வந்த போர், ஐ.நா. சபையின் தலையீடு காரணமாக இப்போது ஒரு வழியாக முடிவடைந்திருக்கிறது. இரு நாடுகளுக்கும் ஏதோ ஒருவித சமரசம் ஏற்பட்டிருக்கிறதெனினும், அதை டச்சு ஏகாதிபத்தியத்தின் வெற்றியென்றே கூறவேண்டும். ஏனெனில் இந்தோனேஷியர்கள் தங்கள் நாட்டிலிருந்து டச்சு ஏகாதிபத்தியத்தை ஒழித்துத் தங்களுடைய பிறப்புரிமையாகிற சுதந்திரத்தைப் பெறவே எத்தனையோ கஷ்டங்களையும் பொருட்படுத்தாது வீரப்போர் புரிந்தனர். ஆனால் அவர்களுடைய முயற்சி இன்னும் வெற்றி பெறவில்லை. டச்சுக்காரர்கள் அக்கிரமமாகப் போர் புரிந்து கைப்பற்றிய பிரதேசங்களெல்லாம் இன்னும் அவர்களின் வசமே இருந்து வருகின்றன.

## புகை அடங்காது

எனினும் இந்தோனேஷியர்களை அடியோடு தோற்கடிக்க முடியாதென்பதைத் தெரிந்துகொண்ட டச்சுக்காரர்கள் அங்கு பிரித்தாளும் தந்திரத்தைக் கையாள முற்பட்டிருக்கிறார்கள். இப்போது ஏற்பட்டுள்ள ஒப்பந்தமும் மேற்படி தந்திரத்துக்கு மறைமுகமாக ஆதரவளிப்பதாய் இருக்கிறது. சர்வதேசக் கமிஷனின் கோரிக்கைக்கு உட்பட்டு இந்தோனேஷியக் குடியரசும் அந்த ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டிருக்கிறது. ஜாவா, சுமத்ரா, மதுரா இந்த மூன்று பிரதேசங்களிலும் சர்வ ஜன வோட்டெடுத்து, அவற்றில் எதெது குடியரசில் சேர விரும்புகிறது என்பதை முடிவு செய்ய வேண்டும் என்பதே ஒப்பந்தத்தின் முக்கிய அம்சமாகும்.

சர்வ ஜன வோட்டெடுப்பதன் மூலம் தங்களுக்கு வெற்றி கிடைக்கலாம் என்பது குடியரசுக் கட்சியினரின் நம்பிக்கை. வோட்டெடுப்பதன் விளைவாக இந்தோனேஷியாவைப் பிரித்தாள முடியும் என்பது டச்சுக்காரர்களின் ஆசை. ஒப்பந்தத்தில் இரு சாராரும் கையெழுத்திட்டிருப்பதற்குக் காரணம் அதுதான்.

ஐ.நா. சபையின் முயற்சியால் இந்தோனேஷியாவில் தற்காலிகமாகச் சமரசம் ஏற்பட்டிருக்கிறதெனினும், அங்கிருந்து டச்சுக்காரர்கள் வெளியேறினாலன்றி அங்கு அமைதி ஏற்படப் போவதில்லை. மேற்படி சமரசம் ஏற்பட்ட இரண்டு தினங்களுக்குள் இந்தோனேஷியாவில் மீண்டும் தகராறு மூண்டிருப்பதே அதற்குச் சான்றாகும். எனவே, இந்தியா, இலங்கை, பர்மா முதலிய நாடுகளிலிருந்து பிரிட்டிஷார் வெளியேறியது போன்று, இந்தோனேஷியாவிலிருந்தும் டச்சுக்காரர்கள் வெளியேறி

விடவேண்டும். அதுவரையில் இந்தோனேஷ்யப் பிரச்னை புகைந்து கொண்டு தான் இருக்கும்.

## நீதி கிடைக்கட்டும்

வெகு தொலைவிலுள்ள தென்னாப்பிரிகா, பிஜி, மலேயா முதலிய தேசங்களில்தான் இந்தியர்கள் கஷ்டத்துக்கு உள்ளாக வேண்டியிருக்கிறதென்றால், இந்தியாவை அடுத்துள்ள இலங்கையிலும் பர்மாவிலும்கூட அவர்கள் நியாயமான உரிமைகளுக்குப் போராட வேண்டியிருப்பது துரதிர்ஷ்டமான விஷயமாகும். இதற்கு முன் வெளிநாடுகளிலுள்ள இந்தியர்கள் எவ்வளவு கதறினாலும் அவர்களுக்குக் கதிமோட்சம் ஏற்படுவது குதிரைக் கொம்பாக இருந்து வந்தது. ஆனால், இனி சுதந்திர இந்தியா அவர்கள் விஷயத்தில் அசிரத்தையாக இருக்க முடியுமா?

பிற நாடுகளிலிருந்து செல்வத்தைச் சுரண்டி வருவதற்காக இந்தியர்கள் அங்கு செல்லவில்லை. அந்தந்த நாட்டு சர்க்கார் இந்தியர்களை வருந்தியழைத்ததின் மீதே அவர்கள் அங்கு சென்றனர். அவர்களில் எண்பது சதவிகிதப் பேர் ஏழைத் தொழிலாளிகளே. அவர்கள் உழைப்பினாலேயே பல நாடுகளும் செழிப்புற்றன. இலங்கையின் கதையும் அப்படித்தான். எனினும், இந்தியர்களின் உழைப்பினால் செழிப்படைந்த இலங்கையில் அவர்களுக்கு நியாயமான உரிமைகள் இல்லையெனில் அது மோசமான விஷயமல்லவா?

சென்றவாரம் இந்தியாவுக்கு விஜயம் செய்திருந்த இலங்கைப் பிரதம மந்திரி ஸ்ரீ சேனநாயகாவுக்கும் பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கும் இலங்கை இந்தியர் உரிமைகள் பற்றிப் பேச்சு வார்த்தைகள் நடந்திருக்கின்றன. இந்தியர்களுக்குப் பிரஜா உரிமைகள் அளிப்பதாக ஸ்ரீ சேனநாயகாவும் உறுதி கூறியிருக்கிறார். இலங்கை இந்தியர்கள் தங்களுக்கு விசேஷ சலுகைகள் காட்ட வேண்டுமென்று கேட்கவில்லை. நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பல வருஷங்களாக உழைத்து இலங்கையைப் பண்படுத்திய தங்களுக்கு நாகரிகமான சர்க்கார் அளிக்கக் கடமைப்பட்டிருக்கும் நியாயமான உரிமைகளையே கோருகின்றனர். எனவே, அனாவசியமான நிபந்தனைகளை விதித்து இந்தியர்களின் உரிமைகளுக்கு உலை வைக்காமல் இலங்கை சர்க்கார் நேர்மையாக நடந்து கொள்ளுவார்களென்று எதிர்பார்க்கிறோம். இந்தியா-இலங்கையின் நீடித்த நட்பு பெரிதும் அந்த ஒரு பிரச்னையையே பொறுத்திருக்கிறது.

# நிகழ்ச்சிச் சித்திரம்











-சாஸ்திரி


....காஷ்மீரப் பிரச்னையை யொட்டி
ஐக்கிய நாடுகள் சபையில்
நடந்து வரும் வாய்ச் சண்டையில்
இந்தியா-பாகிஸ்தான்
பிரதிநிதிகளுக்குள் ஒரு
சமரசம் ஏற்படும்படி
செய்து,....


....அணு குண்டைக் காட்டிலும்
ஆத்ம சக்தியே அதிக பலம்
பொருந்திய தென்பதை உலக
நாடுகளுக்கு நிரூபித்து,....


....அந்தகாரம்
சூழ்ந்த உலகத்திற்கு
அருள் ஜோதியாக
விளங்கும் காந்திஜியின்
சிலையை நியூயார்க்
நகரில் பிரதிஷ்டை
செய்ய வேண்டும் என்று
ஓர் அமெரிக்கப் பிரமுகர் அமெரிக்கா ஜனப் பிரதிநிதி சபையில்
தீர்மானம் கொண்டு வரும்படியும் தூண்டியிருக்கிறது!

# தவம் பலித்தது!

ஆறு நிமிஷ நேரத்தில் ஆயிரக் கணக்கான மக்களை அழித்த அணு சக்தியைக் காட்டிலும், ஆறு நாட்களில் லட்சக் கணக்கானவர்களை அளவற்ற ஆபத்திலிருந்தும் காப்பாற்றிய ஆத்ம சக்தி எத்தனையோ மடங்கு மேலானதென்பதில் சந்தேகம் என்ன?

இந்த உண்மையை இப்போதுதான் மேல்நாட்டுப் பத்திரிகைகள் முதல் தடவையாக ஒப்புக் கொண்டிருக்கின்றன! கண்ணெதிரில் பலனைக் கண்ட பின்தான் மேல்நாட்டினரின் மனத்தில் அந்த உண்மை உறைத்திருக்கிறது.

இன்றைய உலகில் ஆத்ம சக்தி அனுஷ்டானம் அசாத்தியமானது என்று கருதியவர்கள் பாரத நாட்டில் நிகழ்ந்துள்ள சம்பவங்களைக் கண்டு பிரமித்துப் போயிருக்கிறார்கள்.

உண்ணாவிரதத்தின் மூலம் மகாத்மா காந்தி பெற்றுள்ள வெற்றி, அணுகுண்டைக் காட்டிலும் மகத்தான சக்தியொன்று இருக்கிறது என்பதை நிரூபிக்கிறதென்று பிரபல பிரிட்டிஷ் பத்திரிகை கூறுகிறது.

மேற்படி வெற்றியானது மேல்நாட்டினரின் மனத்தில் ஒருங்கே பொறுமையையும் நம்பிக்கையையும் உண்டு பண்ணியிருக்கிறதென்றும், அந்த அற்புத சக்தியின் மகிமையை மேல்நாடுகள் சிரத்தையுடன் கவனித்து வரவேண்டுமென்றும் லண்டன் நியூஸ் கிரானிகல் பத்திரிகை பயபக்தியுடன் குறிப்பிட்டிருக்கிறது.

"காந்திஜியின் ஆத்ம சக்திக்கு எதிரே எவ்வித ஸ்தூல ஆயுதங்களும் வெற்றி பெற முடியாது என்பதை ஐரோப்பாவும் அமெரிக்காவும் உணர்ந்து வெகு காலமாகின்றது. மனிதனின் சிருஷ்டிகள் மனிதனையே கபளீகரம் செய்து விடாமல் தடுக்க முடியும் என்பதையும், எக்காலத்திலும் மேற்படி சிருஷ்டிகளைக் காட்டிலும் மனிதனே மேலானவன் என்பதையும் காந்திஜி நிரூபித்து வருகிறார். எழுபத்தொன்பது வயதான இந்தக் கிழவரின் சக்தி பெரும் மாயமாக இருக்கிறது. அது உலகத்தையே ஆட்டி வைத்து, உலக ஜனங்களின் மனத்தில் ஒரு புதிய சக்தியையும் நம்பிக்கையையும் உண்டுபண்ணுகிறது" என்று அந்தப் பத்திரிகை மகாத்மா காந்தியின் ஆத்ம சக்தியைப் பெரிதும் போற்றியிருக்கிறது.

அரசியல் மேதாவிகளிடையே ஒரு முனிவராகவும் முனிவர்களிடையே ஓர் அரசியல் மேதாவியாகவும் திகழ்ந்து வரும் காந்திஜியின் ஆத்ம சக்தி, இந்தியாவுக்கு இணையற்ற ஒரு வரப் பிரசாதமாகும் என்று பிரபல "மாஞ்செஸ்டர் கார்டியன்" பத்திரிகை பாராட்டியிருக்கிறது.

இவ்விதம் உலகம் முழுதும் போற்றிப் புகழுமாறு மகாத்மா காந்தியின் உண்ணாவிரதம் சீக்கிரமாகவும் வெற்றிகரமாகவும் முடிந்திருப்பதைக் குறித்து பாரதநாட்டு மக்கள் பரவசம் அடைவதில் ஆச்சரியமில்லை.

*   *   *

காந்திஜியின் உண்ணாவிரதத்தினால் உடனடியாக இரண்டு மகத்தான நன்மைகள் ஏற்பட்டிருக்கின்றன.

1. பாகிஸ்தானில் உற்றார் உறவினரையும் உடைமைகளையும் பறி கொடுத்து வந்த அகதிகளின் ஆத்திரம் காரணமாக டில்லியில் குமுறிக் கொண்டிருந்த தீ அணைக்கப்பட்டது.

2. சென்ற வாரம் கராச்சியில் நடந்த படுகொலைகளின் விளைவாக இந்தியாவிலுள்ள பல இடங்களிலும் மனக்கொதிப்பு ஏற்பட்டு வஞ்சம் தீர்க்கும் காரியங்கள் எதுவும் நடைபெறாமல் காப்பாற்றப் பட்டது.

இந்தியாவிலுள்ள முஸ்லிம்களுக்காக மகாத்மா காந்தி, மானிட வர்க்கத்துக்கே இன்றியமையாத பொக்கிஷமான தமது உயிரைப் பணயம் வைக்கத் தயங்கவில்லை.

டாக்டர் சையது முகம்மது குறிப்பிட்டிருப்பது போல், எந்த மகாத்மா காந்தியை முஸ்லிம்களின் முதல் நெம்பர் விரோதி யென்று ஜனாப் ஜின்னா கூறினாரோ, அதே மகாத்மா காந்திதான் தாம் முஸ்லிம்களின் முதல் நெம்பர் நண்பர் என்பதை அன்றும் இன்றும் உலகம் முழுதும் ஒப்புக் கொள்ளுமாறு நிரூபித்திருக்கிறார்.

ஆனால், அதே சமயத்தில் பாகிஸ்தானில் நிகழ்ந்திருப்பதென்ன?

கராச்சியிலும் பாகிஸ்தானிலிருந்து அகதிகள் பிரயாணம் செய்து வந்த ரயில் வண்டியிலும் ஆயிரக்கணக்கில் ஹிந்துக்களும் சீக்கியர்களும் படுகொலை செய்யப்பட்டிருக்கிறார்கள்.

இந்தியாவிலுள்ள முஸ்லிம்களுக்குப் பாதுகாப்பளிப்பதன் மூலம் சிறுபான்மையோர் பிரச்னையைச் சமாளிக்கக் காந்திஜியும் இந்திய சர்க்காரும் அல்லும் பகலும் இடைவிடாது பாடுபட்டு வருகின்றனர்.

பாகிஸ்தான் தலைவர்களோ வென்றால், அங்கு சிறுபான்மையோர் பிரச்னையையும், தங்களுடைய பொருளாதாரப் பிரச்னையையும் தீர்க்கக் குறுக்கு வழியொன்றைக் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

அதாவது பாகிஸ்தானில் வகுப்பு வெறிக்குப் பலியானவர்கள் போக, பாக்கியிருக்கும் ஹிந்துக்களையும் சீக்கியர்களையும் இந்தியாவுக்கு விரட்டியடித்து விட்டு, சிறுபான்மையோர் பிரச்னையைத் தீர்ப்பது; அவர்களுடைய சொத்துக்களைப் பாகிஸ்தான் சர்க்கார் ஆக்கிரமித்துக் கொள்ளுவதன் மூலம் தங்களுடைய பொருளாதார நெருக்கடியைத் தீர்த்துக் கொள்ளுவது; — இவைதான் பாகிஸ்தான் சர்க்காரின் உத்தேசம் என்பதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன.

உதாரணமாக, சிந்து வியாபாரிகள் மாத்திரம் சுமார் ஐந்நூறு கோடி ரூபாய் பெறுமானமுள்ள தங்களுடைய சொத்துக்களைப் பாகிஸ்தானில் விட்டுவிட்டு இந்தியாவுக்கு ஓடி வரும்படி நேர்ந்திருக்கிறது.

மேற்கு பாஞ்சாலத்திலிருந்தும் எல்லைப்புற மாகாணத்திலிருந்தும் இந்தியாவுக்கு வந்து அடைக்கலம் புகுந்துள்ள அகதிகளுடைய சொத்துக்களின் பெறுமானம் ஆயிரம் கோடி ரூபாய்க்கு மேல் ஆகிறது என்று நிபுணர்கள் மதிப்பிட்டிருக்கிறார்கள்.

• • •

காந்திஜி உண்ணாவிரதத்தை முடித்தபின் வெளியிட்டுள்ள ஒரு விஷயத்தைக் கவனிப்பவர்கள், பாகிஸ்தானில் ஏற்பட்டுள்ள வகுப்பு வெறியின் தன்மையை அறிந்து கொள்ளலாம்.

அதாவது ஒரு முஸ்லிம் எழுதியுள்ள புத்தகத்தில் கீழ்வருமாறு குறிப்பிடப்பட்டிருக்கிறது என்பதைக் காந்திஜி எடுத்துக் கூறியிருக்கிறார்.

"ஹிந்துக்கள் விஷப் பூச்சிகளையும் விட மோசமானவர்கள் என்று குரானில் கூறப்பட்டிருக்கிறது. எனவே அவர்களை அடியோடு ஒழித்துவிட வேண்டும். அவ்வாறு ஒழிப்பதில் கொஞ்சமும் பாவமில்லை. அதுதான் ஆண்டவனுக்கு ஆனந்தத்தை அளிக்கும் கைங்கர்யமாகும். ஹிந்துக்களை ஒழிக்க எத்தகைய பலாத்கார முறைகளையும் கையாளலாம்; எவ்வித மோசடியும் செய்யலாம்."

பாகிஸ்தானில் நிகழ்ந்து வரும் சம்பவங்களைக் கவனிப்பவர்கள், மேற்படி விஷப் பிரசாரம் அங்கு வேரூன்றி விட்டதோ என்றே வருந்தவேண்டியிருக்கிறது.

எனினும், காந்திஜி குறிப்பிட்டுள்ள அந்த விஷப் பிரசாரத்தை மௌலானா அபுல்கலாம் ஆஸாத் கடுமையாகக் கண்டித்திருப்பதுடன், தமது கண்டனத்துக்கு ஆதாரமாகக் குரானிலிருந்தே சில வாக்கியங்களை எடுத்துச் சொல்லியிருக்கிறார்.

"மேற்படி பாழும் பிரசுரம் இஸ்லாம் மதத்தையே இழிவு படுத்துவதாக இருக்கிறது. அந்தப் புத்தகத்திலுள்ள விஷப் பிரசாரம் இஸ்லாத்துக்கே முற்றிலும் முரணாகும். ஜாதிமத பேதமின்றி மானிட வர்க்கத்தைச் சேர்ந்த சகலரும் சகோதரர்கள் என்றே குரான் உபதேசிக்கின்றது. அப்படியிருக்க, அதற்கு நேர்மாறாக எல்லோரையும் ஒழித்துவிட வேண்டுமென்று அந்தப் புத்தகத்தில் கூறியிருப்பதே, சமீபகாலமாக ஒரு பிரிவினரைப் பிடித்து ஆட்டிவரும் வெறியைத் தூண்டியிருக்கிறதென்பது நன்கு தெரிகிறது" என்று மௌலானா ஆஸாத் பாகிஸ்தானில் ஏற்பட்டுள்ள வகுப்பு வெறியின் காரணத்தை விளக்கியிருக்கிறார்.

• • •

பல முஸ்லிம் நாடுகளிலும், "யூதர்களையும் இந்தியர்களையும் ஒழிக்க வேண்டும்" என்ற கூக்குரல் ஏற்பட்டு வருவதும் மேற்படி விஷப் பிரசாரத்தின் விளைவே என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

எனினும் இந்த உண்மையை ஸர் ஜபருல்லாகான் தலைகீழாக மாற்றியிருப்பதுதான் வேடிக்கையாகும்.

ஐக்கிய நாடுகள் சபையில் இந்திய சர்க்கார் பிரதிநிதியின் கண்ணியமான

வாதத்துக்குப் பாகிஸ்தான் பிரதிநிதி ஸர் ஜபருல்லா கான் அளித்துள்ள பதிலைப் பாருங்கள். அதிலிருந்து பாகிஸ்தான் எத்தகைய படுமோசமான பொய்ப் பிரசாரத்துக்கும் துணிந்திருக்கிறது என்பது வெளியாகிறது.

இஸ்லாம் மதத்தினரை அடியோடு அழித்து ஒழித்து விடுவதே இந்தியாவின் நோக்கமாம்! அந்த நோக்கத்தை இந்தியா நிறைவேற்றியும் வருகிறதாம்! முஸ்லிம்களை ஒழிப்பதற்காக இந்திய சர்க்கார் ஜனங்களுக்குப் பலவித ஆயுதங்களையும் கொடுத்திருக்கிறார்களாம்!

இவை போன்ற அபாண்டமான கூற்றுக்களை ஜபருல்லாகான் சர்வதேச அரங்கத்தில் அள்ளி வீசியிருக்கிறார்.

இந்தியாவுக்கு விரோதமாக அவர் அந்கச் சபையில் ஆறு மணி நேரம் பொழிந்த வசை மாரியில் இன்னும் எத்தனையோ கலப்பற்ற புளுகுகள் அடங்கியிருக்கின்றன.

இந்தியாவிலுள்ள முஸ்லிம்களின் உயிரையும் உடைமையையும் காப்பாற்றித் தேசம் முழுதும் அன்பும் அன்னியோன்னியமும் நிலவுவதற்காகக் காந்திஜியும் இந்திய சர்க்காரும் அரும்பாடு பட்டுவரும் சமயத்தில், ஜபருல்லாகான் போன்ற பிரமுகர்கள் அவ்வாறு கூறுவது பாகிஸ்தானுக்குப் பெருமையாகாது.

காஷ்மீரப் பிரச்னையை யொட்டிய வாய்ச் சண்டையை வளர விடாமல் ஐ. நா. சபை ஒரு கமிஷனை நியமித்திருப்பது நல்ல காரியம்தான். அதன் மூலமாகவாவது, காஷ்மீரத்தில் படையெடுத்துள்ள கொலைகாரர்களின் அட்டூழியங்கள் நின்று அமைதியுண்டாக வழி பிறக்கட்டும்.

ஏது எப்படியாயினும் மகாத்மா காந்தியின் தவம் வீண் போகவில்லை.

டில்லியில் குமுறிக் கொண்டிருந்த வகுப்பு வெறித் தீ அணைந்திருக்கிறது. ஹிந்துக்களும் முஸ்லிம்களும் தாங்கள் சகோதரர்கள் என்பதை உணர்ந்து கொண்டது மாத்திரமல்ல, அந்த உண்மையைத் தெருத் தெருவாகச் சென்று கோஷித்தும் வருகிறார்கள்.

முஸ்லிம்களுடைய நலன்களைப் பாதுகாப்பதற்காகக் காந்திஜி விதித்துள்ள நிபந்தனைகளை நிறைவேற்றவும், டில்லியில் மாத்திரமின்றி இந்தியா முழுதும் வகுப்பு வேற்றுமையை ஒழித்து ஹிந்து—முஸ்லிம்களிடையே நிரந்தரமான சகோதர பாவத்தை உண்டு பண்ணுவதற்காகவும் காங்கிரஸ் அக்ராசனர் பாபு ராஜேந்திரப் பிரசாத்தின் தலைமையில் அந்தந்தச் சமூகத் தலைவர்களடங்கிய கமிட்டியும் நியமிக்கப்பட்டிருக்கிறது.

பாகிஸ்தானில் வகுப்புவெறி அடங்குவதற்கு வழி பிறக்குமாயின், மேற்படி கமிட்டியின் அலுவல்கள் சுலபமாக நிறைவேறும்.

எனினும், இந்தியா சம்பந்தப்பட்ட வரையில் மீண்டும் வகுப்புக் கலகம் ஏற்படுமாயின் மறுபடியும் உண்ணாவிரதமிருக்கத் தாம் தயங்கப் போவதில்லை என்று காந்திஜி எச்சரிக்கை செய்துள்ளார்.

எனவே, அவ்விஷயத்தில் மிகவும் ஜாக்கிரதையாக இருந்து, மீண்டும் காந்திஜி உண்ணாவிரதம் அனுஷ்டிக்கும்படியான நிலைமைக்கு இடம் கொடுக்காமலிருக்க வேண்டியது இந்தியாவிலுள்ள முப்பது கோடி மகா ஜனங்களின் கடமையாகின்றது.

அன்னியரின் ஆதிக்கத்தை எதிர்த்து அடிக்கடி உண்ணாவிரதம் இருக்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்ட காந்திஜிக்கு, தம்முடைய தேச ஜனங்களின் தவறுகளுக்காகவும் உண்ணாவிரதம் இருக்கும்படி நேருவது சுதந்திர இந்தியாவின் கௌரவத்துக்குச் சிறிதும் ஏற்றதல்ல.

எனவே, சுதந்திர இந்தியாவில் காந்திஜி மூன்றாவது முறையாக உண்ணாவிரதம் இருக்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்படாமல் தவிர்க்க முஸ்லிம்கள் உட்பட இந்தியாவிலுள்ள சகலரும் முயற்சிக்க வேண்டும்.

## இரட்டைப் பரிசு

'திருமணி மாலை' ஆசிரியர் ஸ்ரீ ஆர். ரங்கராமானுஜ அய்யங்கார் பி. ஏ. எல். டி. அவர்களின் செல்வக் குமாரி பத்மா சென்ற 1947 டிசம்பர் இறுதியில் மியூஸிக் அகாடமியிலும், பைன் ஆர்ட்ஸ் சொஸைடியிலும் நடத்தப்பட்ட இரண்டு வீணை வாத்தியப் போட்டியிலும் முதற் பரிசு பெற்றுள்.



# மூன்று வருஷத் திட்டம்

எட்டு வருஷங்களுக்கு முன்னால் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியின் தலைமைப் பதவிக்கு இரண்டு தமிழ்நாட்டுத் தொண்டர்கள் போட்டி யிட்டார்கள். இருவரும் சுமார் கால் நூற்றாண்டு காலம் தேசத்துக்காக ஊழியம் புரிந்தவர்கள். சிறைவாசம் முதலிய கஷ்டங்களை அநுபவித்தவர்கள். ஒருவர் கோயமுத்தூர் ஸ்ரீ சி. பி. சுப்பையா; இன்னொருவர் ஸ்ரீ காமராஜ நாடார். இரண்டு வோட்டுகளின் வித்தியாசத்தினால் ஸ்ரீ காமராஜ நாடார் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இதற்குப் பிறகு இந்தியா தேசத்திலும் தமிழ் நாட்டிலும் எத்தனையோ சம்பவங்கள் நிகழ்ந்து விட்டன. ஆங்கிலத்திலே சொல்வதுபோல, 'பாலத்தின் அடியில் எவ்வளவோ தண்ணீர் பாய்ந்து ஓடிவிட்டது.' எல்லாவற்றிலும் முக்கியமான சம்பவம், இந்தியா தேசம் சுதந்திரம் அடைந்து விட்டதுதான்! ஆயிரக் கணக்கான தேச பக்தர்கள் எந்த இலட்சியத்துக்காக மகத்தான தியாகங்களைச் செய்தார்களோ, அந்த இலட்சியம் கைகூடி விட்டது.

இந்தியா விடுதலை பெற்றுப் புதுடில்லியில் நமது மாபெரும் தலைவர்கள் அரசாளும் இந்தப் புண்ணிய வருஷத்தில், ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு, தமிழ் மாகாண காங்கிரஸ் மகாநாடு கூடிற்று. அன்று மாகாண காங்கிரஸ் கமிட்டியின் தலைமைப் பதவிக்குப் போட்டியிட்ட இருவரில் ஒருவரான ஸ்ரீ சி. பி. சுப்பையா கோயமுத்தூர் மகாநாட்டின் வரவேற்புச் சபைத் தலைவராயிருந்தார்; இன்னொருவர் மகாநாட்டின் அக்கிராசனராயிருந்தார். தமிழ் நாட்டின் வருங்காலத்துக்கு இது ஓர் அருமையான சுபசகுனம் என்று கருதுகிறோம்.

சமீப வருங்காலத்தில், அதாவது வரப்போகும் மூன்று அல்லது ஐந்து வருஷங்களில் தமிழ் நாட்டுத் தேசதொண்டர்களுக்குள்ளே ஒற்றுமையும் கட்டுப்பாடும் மிக அவசியமாயிருக்கும். இந்தியா சுதந்திரம் பெற்றுவிட்டது என்பது உண்மைதான். ஆனால் அறிவுடனும் ஜாக்கிரதையுடனும் நடந்து கொள்ளா விட்டால் பெற்ற சுதந்திரத்தைப் பறி கொடுக்க அதிக காலம் ஆகாது. நம் கண் முன்னால் பல தேசங்கள் தங்கள் சுதந்திரத்தை இழந்து அன்னிய ஆதிக்கத்துக்கு உட்பட்டிருப்பதைப் பார்க்கிறோம். அத்தகைய பயங்கர கதிக்கு, "கண்ணிலான் பெற்றிழந்தான்" என்று கம்பர் பெருமான் குறிப்பிட்டிருக்கும் துர்க்கதிக்கு இந்தியா ஆளாகாமலிருக்க வேண்டுமானால், இத்தனை காலம் சுதந்திரப் போர் நடத்திய தொண்டர்கள் அனைவரும் கண்ணும் கருத்துமாயிருக்க வேண்டும்; உலகம் காணாத அதிசயமான அஹிம்சை முறையில் பாரதநாட்டைச் சுதந்திர நாடாகச் செய்த மாபெருந் தலைவர்களிடம் நம்பிக்கையும் பக்தியும் வைத்து நடந்து கொள்ள வேண்டும்.

பல காலம் பல பெரியோர்கள் தவம் செய்து பெற்ற சுதந்திரக் குழந்தையை எத்தனையோ அபாயங்கள் சூழ்ந்திருக்கின்றன. வெளியேயிருந்து வரும் அபாயங்களும் இருக்கின்றன; உள்ளிருந்தே கெடுக்கக்கூடிய அபாயங்களும் இருக்கின்றன. கண் உள்ளவர்களுக்கெல்லாம் இந்த அபாயங்கள் புலப்படாமல் இரா.

எனவே, வரப்போகும் காலைந்து வருஷம் தேச பக்தர் தேசத் தொண்டர் இருக்கூட்டத்துக்கு ஒரு பெருஞ் சோதனைக் காலம் என்று சொல்லலாம். ஆகையினாலேயே ஸ்ரீ சி. பி. சுப்பையா வரவேற்புத் தலைவராகவும் ஸ்ரீ காமராஜ நாடார் அக்கிராசனராகவும் பதவி வகித்து நடத்திய கோயமுத்தூர் மாகாண மகாநாட்டை ஒரு சுப சகுனம் என்று குறிப்பிடுகிறோம்.

* * *

மாகாண மகாநாட்டில் பல தீர்மானங்கள் நிறைவேறி யிருக்கின்றன. அவற்றில் பல தீர்மானங்கள் சம்பிரதாயமானவை; சில முக்கியமானவை.

சென்ற மாகாண மகாநாட்டுக்குப் பிறகு உலக வாழ்வை நீத்த சுமார் அறுபது தேச பக்தர்களின் ஜாபிதா கொடுத்து அவர்களுடைய மரணத்துக்காக அநுதாபம் செலுத்தும் தீர்மானம் ஒன்று.

இந்தியாவில் யூனியன் ஜாக் கொடி பறந்த இடங்களிலே இந்தியாவின் தேசிய சுதந்திரக்

கொடி பறக்கும் காட்சியைப் பாராமலே அவர்கள் கண் மூடி விட்டார்கள்.

இருந்தாலும், மரணத்திலும் அவர்கள் நாட்டுக்குச் சேவை செய்திருக்கிறார்கள். இன்றைய தினம், "உணவு இல்லை! உணவு இல்லை!" என்று கதறும் மக்களோடு உணவுப் பொருளுக்குப் போட்டி யிடாமல் அவர்கள் போய்விட்டார்கள் அல்லவா? அந்த விதத்தில் புண்ணியம் செய்தவர்கள்தான்.

கோயமுத்தூர் மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானங்களுக்குள்ளே மிக முக்கியமானது உணவு உற்பத்தியைப் பற்றியது என்று நாம் கருதுகிறோம்.

அருந் தவம் செய்து அரிதில் பெற்ற சுதந்திரத்தை இந்தியா இழந்துவிட ஏதுவாகக் கூடிய காரணங்களில் மிக முக்கியமானவை பஞ்சமும் பட்டினியும்.

பாகிஸ்தானிலிருந்தோ, அதற்கும் அப்பால் உள்ள ஆப்கானிஸ்தானிலிருந்தோ, அல்லது ருஷியாவிலிருந்துதானோ படையெடுப்பு வந்தாலும் தடுத்து நிறுத்தி வெற்றியடையலாம். அவ்விதம் வெளி நாட்டுப் பகையை எதிர்ப்பதற்கு மக்களுக்குத் தேக பலம் வேண்டும்; மன உறுதி வேண்டும். இந்த இரண்டையும் தரக் கூடிய உணவுப் பொருளை நம் நாட்டிலேயே உற்பத்தி செய்துகொள்ள வேண்டும்.

சென்ற வாரத்துத் தினப் பத்திரிகைகளைப் படிக்க நேர்ந்தவர்கள் எல்லாரும் ஒரு விஷயத்தைக் கவனித்திருப்பார்கள். "உற்பத்தி அல்லது சர்வ நாசம்" என்னும் பல்லவியைத் தினம் ஒரு மாபெருந் தலைவர் பாடி விருப்பதைப் பார்த்திருப்பார்கள். "உணவைப் பெருக்குங்கள்; உற்பத்தியைப் பெருக்குங்கள்!" என்று புது டில்லியில் பண்டித ஜவாஹர்லால் நேரு பேசியிருக்கிறார்; பொதுக் கூட்டத்திலும் ரேடியோவிலும் பேசியிருக்கிறார்.

சர்தார் வல்லபாய் பட்டேல் பம்பாயில் "உணவும் உற்பத்தியும் உடனே பெருகாவிட்டால் எல்லாரும் அழிந்துபோவோம்!" என்று எச்சரித்திருக்கிறார்.

சென்னைக் கவர்னர் ஸர் ஆர்ச்சிபால்ட் நை க்ஷயரோகத் தடுப்பைப் பற்றிப் பேசுகையில் இதே விஷயத்தைக் குறிப்பிட்டிருக்கிறார். "க்ஷயரோகத்துக்கு மூல காரணம் உணவு போதாமைதான்; நாட்டில் உணவு உற்பத்தி அதிகமாகாவிட்டால் எந்த முன்னேற்றமும் கைகூடாது!" என்று சொல்லியிருக்கிறார்.

சென்னைப் பிரதம மந்திரி, பல இடங்களில் சொன்னது போலவே கோயமுத்தூர் மகாநாட்டிலும் "உற்பத்தியைப் பெருக்குங்கள்!" என்று வேண்டிக் கொண்டிருக்கிறார்.

கோயமுத்தூர் மகாநாடும் இது விஷயமாகத் தீர்மானம் செய்திருக்கிறது. இந்த மாகாணத்துக்கு வேண்டிய உணவுப் பொருளை இந்த மாகாணத்திலேயே உற்பத்தி செய்து கொள்ளும்படியாக மூன்று வருஷத் திட்டம் ஒன்று தயாரித்து நடத்தும்படி சென்னை மாகாண சர்க்காரை மேற்படி தீர்மானம் கேட்டுக் கொள்கிறது.

சர்க்காரை நடத்தும் தலைவர்கள் "உணவைப் பெருக்குங்கள்!" "உணவைப் பெருக்குங்கள்!" என்று மக்களுக்கு உபதேசம் செய்தால் மட்டும் போதாது. அதைக் காரியத்தில் நிறைவேற்றுவதற்குச் சரியான திட்டம் போட்டு வழி காட்டி உதவி செய்ய வேண்டும்.

சர்க்காரும், அதாவது சர்க்காரை நடத்தும் மந்திரிகளும், சர்க்கார் உத்தியோகஸ்தர்களும், விவசாயிகளும், தேசத் தொண்டர்களும், பொது மக்களும் — ஆக நாட்டில் உள்ள எல்லாரும சேர்ந்து நடத்த வேண்டிய காரியம் இது.

உற்பத்தித் திட்டம் போட வேண்டியதும், அதை நடத்தி வைப்பதற்குச் சர்க்கார் இலாகாக்களைத் தக்கபடி ஏவவேண்டியதும் மந்திரிமார்களின் கடமை. உணவு உற்பத்தியைப் பெருக்கும் விஷயத்தில் சில காரியங்கள் சர்க்காரால்தான் செய்ய முடியும். அவற்றைத் தனிப்பட்டவர்களாலோ, பொது மக்களாலோ செய்ய முடியாது.

உதாரணமாக, பெட்ரோலையும் மின்சார சக்தியையும் கவனிக்கலாம். இந்த இரண்டும் விவசாயத்துக்குத் தேவையா யுள்ள இடங்களில் கிடைக்கச் செய்வது சர்க்காரின் கடமை; சர்க்காரால்தான் செய்ய முடியும். கிடைக்கச் செய்வது மட்டும் அல்ல; பெட்ரோலும் மின்சாரமும் உணவு உற்பத்திக்கே முதல் பாத்தியதையாகச் செய்ய வேண்டும். விவசாயத்துக்கு முதலிலே அவற்றைக் கொடுத்துவிட்டு, அப்புறந்தான் மற்றக் காரியங்களுக்கு என்று ஏற்படுத்த வேண்டும்.

இவ்விதமே விவசாயக் கருவிகளுக்கு வேண்டிய இரும்பு, அணை கட்டச் சிமெண்டு இவை முதல் பாத்தியதையாகக் கிடைக்கச் செய்ய வேண்டும். இவையெல்

லாம் நாட்டை ஆளும் சர்க்கார் மட்டுமே செய்யக் கூடிய காரியங்கள்.

அம்மாதிரியே ஒவ்வொரு ஜில்லாவிலும் ஜில்லா கலெக்டர் முதல் கிராம முனிசிப் வரையில் சகல சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் விவசாய அபிவிருத்தியில் கவனம் செலுத்த வேண்டும் என்று யார் உத்தரவு போட முடியும்? சர்க்கார்தான்.

சர்க்கார் சரியான திட்டம் போட்டுக் கொடுத்து, சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் தங்கள் கடமையைச் செய்யும் பட்சத்தில் விவசாயிகளும் பொது ஜனங்களும் தங்கள் கடமையைச் செய்யும்படி பிரசாரம் செய்யலாம். இந்தப் பிரசாரத்தைத் தேசத் தொண்டர்கள் மேற்கொள்ள வேண்டும்.

உண்மையில், இந்தியாவின் சுதந்திரத்துக்காக எவ்வளவு தீவிரமாகவும் தியாக புத்தியுடனும் பாடு பட்டோமோ அவ்வளவு தீவிரமும் தியாக புத்தியும் காட்டிப் பாடு பட வேண்டிய காரியம் இது. அப்படிப் பாடு பட்டால்தான் கிடைத்த சுதந்திரம் நிலைத்து நிற்கும்.

எனவே, இது விஷயமாகக் கோயமுத்தூர் மகாநாடு செய்த தீர்மானத்தைப் பெரிதும் பாராட்டுகிறோம்.

மகாநாட்டிற்கு விஜயம் செய்திருந்த மந்திரிமார்கள் உடனே அதைக் காரியத்தில் நிறைவேற்றத் தொடங்குவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

• • •

மகாநாட்டில் நிறைவேறிய இன்னொரு முக்கியமான தீர்மானம் சுதந்திர இந்தியாவில் எத்தகைய அரசாங்க முறையை அமைக்க வேண்டும் என்பது பற்றியது.

சுதந்திர இந்தியாவுக்கு மைசூர் மகாராஜாவையோ, நைஜாம் மன்னரையோ, பாடியாலா மகாராஜாவையோ நாம் சக்கரவர்த்தியாக முடி சூட்டலாம். அத்தகைய சக்கரவர்த்தியின் ஒரு குடை நிழலில் இந்திய மக்கள் நிம்மதியாக வாழலாம். ஆனால் இத்தகைய சுதந்திரத்தைத் தற்சமயம் யாரும் விரும்ப மாட்டார்கள்.

அல்லது பம்பாய்—ஆமதாபாத்—கோயமுத்தூர் ஆலை முதலாளிகளைக் கொண்டு ஒரு சர்வாதிகார சர்க்காரை ஏற்படுத்தலாம்.

அல்லது மேற்படி நகரங்களில் உள்ள ஆலைத் தொழிலாளிகளின் தலைவர்களிடம் அரசாங்கத்தைக் கொடுத்துச் சர்வாதிகாரத்துடன் நடத்தச் சொல்லலாம்.

அல்லது அகில இந்திய ரயில்வேத் தொழிலாளிகளின் தலைவர்களையோ, தபால் தொழிலாளர் தலைவர்களையோ சர்க்காரை நடத்தும்படி கேட்கலாம்.

அல்லது குறிப்பிட்ட ஒரு சாதியார்தான் அரசாள வேண்டும், மற்றவர்கள் எல்லாம் தங்களுக்கு இட்ட காரியத்தைப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும் என்றும் ஏற்படுத்தி விடலாம்.

ஆனால் இந்தியாவின் சுதந்திரத்துக்காகப் போராடி வெற்றியடைந்த பொதுமக்கள் இதையெல்லாம் விரும்ப மாட்டார்கள்.

பின்னர், சுதந்திர இந்தியாவில் எத்தகைய ஆட்சி முறையைப் பொது மக்கள் விரும்புவார்கள் என்று கேட்டால், என், அதற்குப் பதில் காங்கிரஸ் மகா சபை சென்ற தேர்தலின்போது வோட்டர்களுக்கு விடுத்த விண்ணப்பப் பத்திரத்தில் தெளிவாக இருக்கிறது.

அந்தப் பத்திரத்தில் உள்ள காங்கிரஸ் வேலைத் திட்டமானது, ஜன நாயகத்தை அடிப்படையாகக் கொண்ட சமதர்ம ஆட்சிக்குரிய திட்டமே யாகும்.

கோயமுத்தூர் மகாநாட்டில் இதைத் தெளிவான சொற்களில் தீர்மானமாக நிறைவேற்றி யிருக்கிறார்கள்.

அதாவது சுதந்திர இந்தியாவின் ஆட்சி முறை 'ஜனநாயக ஸோஷலிஸம்' என்பதாக நிர்ணயிக்க வேண்டும் என்று மேற்படி தீர்மானம் சொல்கிறது.

சரியான சமயத்தில் செய்த சரியான தீர்மானம் என்று இதைச் சொல்லவேண்டும்.

• • •

காங்கிரஸ் மகா சபை தேச சுதந்திரத்தை முதன்மையான இலட்சியமாகக் கொண்டு போராடியது. அந்த இலட்சியம் நிறைவேறி விட்டது. எனவே, இனி காங்கிரஸுக்கு ஒரு இலட்சியம் வேண்டும். அந்த இலட்சியம் ஏற்கனவே காங்கிரஸ் வெளியிட்டுள்ள அரசியல் திட்டங்களிலும் சட்ட சபைத் திட்டங்களிலும் அடங்கியிருக்கிறது. அது ஜனநாயக ஸோஷலிஸம்தான்.

பண்டித ஜவாஹர்லாலைக் காட்டிலும் சிறந்த ஸோஷலிஸ்ட்,—உண்மையான சமதர்மவாதி—இந்தியாவிலே வேறு யாரும் இருக்க முடியாது.

ஏழை - பணக்காரன் என்ற வேற்றுமையை ஒழிக்க வேண்டும் என்பதில் காந்தி மகானைக் காட்டிலும் சிரத்தையுள்ளவர்கள் இருக்க முடியாது.

ஜனநாயக — சமதர்மத்தை நிலைநாட்டுவதில் காங்கிரஸைக் காட்டிலும் அக்கறையுள்ள ஸ்தாபனமும் வேறு கிடையாது.

நமது மாபெரும் தலைவர்கள் பலாத்காரமில்லாமல் அஹிம்சை முறையில் "சுயராஜ்யம் கொள்வோம்!" என்றார்கள்.

அது குறித்து உலகமெல்லாம் அவநம்பிக்கைப் பட்டது; நம்மிலேயே பலர் அவநம்பிக்கை கொண்டோம்.

நமது அவநம்பிக்கைதான் பொய்யாயிற்று. நம் தலைவர்கள் சொன்னபடி செய்து காட்டினார்கள். அஹிம்சா முறையிலேயே சுதந்திரம் தேடித் தந்தார்கள்.

அதே தலைவர்கள்தான் இப்போது அரசாங்கத்தை நடத்துகிறார்கள். "இன்னும் சில காலம் எங்களை நம்புங்கள்! நாட்டிலுள்ள சீர்கேடுகளை ஒழிக்கிறோம்!" என்று அவர்கள் சொல்கிறார்கள்.

சுதந்திரப் போர் நடத்திய காலத்தில் இருபத்தைந்து வருஷம் அவர்களை நம்பி அவர்கள் காட்டிய வழியைப் பின்பற்றினோம். அதன் பலனாகவே இன்று இந்தியாவில் காஷ்மீரம் முதல் கன்னியா குமரி வரையில் சுதந்திரக் கொடி பறக்கிறது.

அதே தலைவர்களிடம் இன்னும் சில காலம்—குறைந்தபட்சம் ஐந்து வருஷம்—நாம் நம்பிக்கை காட்டவேண்டும். நாட்டிலுள்ள சீர்கேடுகளை அவர்கள் ஒழிக்கிறார்களா, இல்லையா என்று பார்க்க வேண்டும். எதை முதலில் செய்வது, எதை இரண்டாவதாகச் செய்வது என்பதையெல்லாம் நம்மைக் காட்டிலும் அவர்கள் நன்கறிந்து செய்வார்கள் என்று நம்பவேண்டும்.

இச்சமயம் அவசரப்பட்டு நமது உத்தமத் தலைவர்களைக் கைவிட்டோமானால், அது பெரும் மடமைச் செயல் என்பது மட்டுமல்ல;—தேசத் துரோகமும் சுதந்திரத் துரோகமும் ஆகும்.

---

# தியாகராஜர் திருப்பணி

நாளை ஜனவரி 30உ திருவையாற்றில் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் ஆராதனை உற்சவம் நடைபெறப் போகிறது. நாதப்பிரம்மத்தின் அவதாரமான அந்த மகான் சமாதியாகி இது 101-வது வருஷம். சென்ற வருஷம் நூற்றாண்டுக் கொண்டாட்டத்தைப் பிரபலமாக நடத்த எண்ணியபடி நடத்த முடியவில்லை. இந்த வருஷமும் சாதாரண முறையிலேயே நடைபெறப் போகிறது.

இதற்கிடையில், உற்சவ நிர்வாகக் கமிட்டியில் அபிப்பிராய பேதங்கள் காரணமாகச் சில மாறுதல்கள் நிகழ்ந்திருப்பதாக அறிகிறோம். எட்டு வருஷங்களுக்கு முன்னால், பிரிவு பட்டிருந்த இரு சங்கீத கோஷ்டிகளையும் அரும பாடுபட்டு ஒன்று சேர்த்து வைத்த ஸ்ரீ முசிரி சுப்பிரமண்ய ஐயர் அவர்கள் காரியதரிசி பதவியிலிருந்து விலகிக் கொண்டதாகத் தெரிகிறது.

எது எப்படியானாலும், ஒரே ஒரு தியாகராஜ பக்தர் இடைவிடாத பக்தியோடு தியாகராஜ ஸ்வாமிக்கு உகந்த சங்கீதத் திருப்பணியைச் செய்து வருகிறார். சென்ற ஆண்டில் நூற்றாண்டு விழாவின் சமயத்தில் ஸ்ரீ ஆர். ரங்கராமானுஜ அய்யங்கார் பி.ஏ., எல்.டி. 'கிருதி மணிமாலை'யின் முதற் பாகத்தை வெளியிட்டார். இந்த வருஷத்து ஆராதனை உற்சவ சந்தர்ப்பத்தில் மேற்படி நூலின் இரண்டாவது பாகத்தை வெளியிட்டிருக்கிறார். இந்த இரண்டாம் பாகத்தில் மொத்தம் 145 தியாகராஜ கீர்த்தனங்கள் தமிழ் எழுத்திலும் தெலுங்கு எழுத்திலும் அந்தந்தக் கீர்த்தனங்களுக்குரிய ஸ்வரங்களோடு அச்சிடப்பட்டிருக்கின்றன. கீர்த்தனங்களின் கருத்துரை முன்னால் தரப்பட்டிருக்கிறது. சுமார் 550 பக்கங்கள் கொண்ட இந்தப் புத்தகத்தைப் புரட்டிப் பார்க்கும்போதே, "அடடா! இதையெல்லாம் ஸ்வரப்படுத்தவும் அச்சுக்குக் கொடுக்கவும் 'புரூப்' திருத்தவும் ஸ்ரீ ராமானுஜய்யங்கார் எவ்வளவு பாடுபட்டு உழைத்திருக்க வேண்டும்! ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளிடம் இவர் கொண்டுள்ள பக்தி எவ்வளவு திடமான பக்தியாயிருக்க வேண்டும்!" என்ற வியப்பு யாருக்கும் ஏற்படும்.

முதற் பாகத்தின் விலையை மிகவும் குறைவாக வைத்துவிட்டதில் ஸ்ரீ ரங்கராமானுஜய்யங்கார் நஷ்டப்பட்டிருக்க வேண்டும். இந்த இரண்டாம் பகுதியின் விலை ரூ. 9—8—0 என்று சரியாக நிர்ணயித்திருக்கிறார்.

காலா காலத்தில் மற்ற இரு புத்தகங்களும் வெளியாகி, இந்தத் தியாகராஜ பக்தரின் திருப்பணி நன்கு பூர்த்தியாக வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.

விலாசம்:—ஆர். ரங்கராமானுஜ அய்யங்கார், சபர்மதி, சேட்காலனி, எழும்பூர்.



கோயமுத்தூரில் நானது ஜனவரி 18, 19உ களில் தமிழ் மாகாண அரசியல் மகாநாடு சிறப்பாக நடைபெற்றது. இந்தியாவின் சுதந்திரக் கொடி யேற்ற வைபவத்துடன் மகாநாடு ஆரம்பமாயிற்று.

ஸ்ரீமதி அம்புஜம்மாள் கொடி யேற்றும் வைபவத்தை நடத்தினர். கையில் பையுடனே இதோ கம்பீரமாக நிற்பவர் வரவேற்பு சபைத் தலைவர் ஸ்ரீ சி. பி. சுப்பையா. கீழே: மகாநாட்டில் தொண்டு செய்த தொண்டர் படையில் ஒரு பகுதியைக் காணலாம்.



மகாநாடு தொடங்கும் சமயத்தில் காந்தி மகான் உண்ணாவிரதத்தை நிறுத்திய சந்தோஷச் செய்தி வந்து சேர்ந்தது. ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களும் குமாரி ராதாவும்

“வாழ்க நீ எம்மான்” “வைஷ்ணவ ஜனதோ” என்னும் கீதங்களைப்பாடினார்கள்.

ஃ

மகா நாட்டுப் பந்தலில் பிரதிநிதிகளும் பார்வையாளரும் திரளாகக் கூடி யிருந்த மா பெரும் காட்சி.

*

மகா நாட்டின் தலைவர் ஸ்ரீ காமராஜ நாடார் தமது தலைமைப் பிரசங்கத்தைத் தொடங்குகிறார்.

*



மாகாண மகாநாட்டில் தொண்டுசெய்த பெண் தொண்டர் படையில் ஒரு பகுதி.

மாகாண மந்திரிகள் பலரும் மகாநாட்டுக்கு விஜயம் செய்திருந்தார்கள்.

மேலே :—ஸ்ரீமதி அம்மு சுவாமிநாதன், ஸ்ரீ சீதாராம ரெட்டி, ஸ்ரீ டேனியல் தாமஸ், ஸ்ரீ மாதவ மேனன், ஸ்ரீமதி மாதவ மேனன்.

●

கீழே :—பிரதம மந்திரியும், உணவு மந்திரியும் சந்தோஷமாக இருக்கும் அபூர்வக் காட்சி.



# மதுரைக் கிழார்

பகீரதன்

2

**ப**லத்த கோஷங்களுக் கிடையே ஸ்ரீ ஆர். கே. சண்முகம் செட்டியார் தமிழ்த் திருநாள் மகாநாட்டின் தலைமைப் பீடத்தில் அமர்ந்து, மகாநாட்டை ஆரம்பித்து வைக்கும்படியாக நமது மாகாணப் பிரதம மந்திரி ஓமந்தூர் ஸ்ரீ ராமசாமி ரெட்டியாரை வேண்டிக் கொண்டார்.

ஜனங்களின் சந்தோஷ ஆரவாரங்களுக் கிடையே பிரதம மந்திரி எழுந்தார். அங்கு கூடியிருந்த எல்லாருடைய கரங்களையும் காகரவென்று பிடித்து இழுத்து வந்து தம் அருகில் நிறுத்திக்கொண்டு, தமிழகத்தின் பழங்காலச் சரித்திரக் காட்சிப் படங்களைக் காட்டினார். "இதோ, இந்தக் கோவிலைப் பாருங்கள்; இந்தச் சித்திரங்கள், இந்தச் சிலைகள், இந்தச் சிற்பங்கள், இந்த அற்புதமான நூல்கள் எல்லாவற்றையும் பாருங்கள்!" என்று காண்பித்தார்.

பிறகு அங்கே கூடியிருந்த ஆயிரக் கணக்கான மக்களையும் இரண்டாயிர வருஷங்களுக்கு முன் அழைத்துச் சென்று, சிவபெருமானும் முருகக் கடவுளும் நக்கீரர் முதலிய புலவர்களும் தமிழ் வளர்த்த வைபவத்தைக் காட்டினார். திடீரென்று ஜாலக் கண்ணாடியைத் திருப்பி, தமிழ் நாட்டுச் சித்தர்கள் தெய்வ பக்தியோடு தேக பலம் பெற்றுப் பல நூறு ஆண்டுகள் வாழ்ந்து வந்த அதிசயத்தையும் காட்டினார்.

கடைசியாகத் திருக்குறள், ராமாயணம் முதலிய நூல்களில் கூறப்பட்டிருக்கும் அரிய விஷயங்களில் சிலவற்றைச் சொல்லி, பிற மொழிகளிடத்தில் துவேஷம் பாராட்டாமல் தமிழ் மொழியை வளர்க்கவேண்டும் என்று குறிப்பிட்டுத் தமது அரிய சொற்பொழிவை முடித்தார்.

**பு**து மண்டபத்தில் கூடியிருந்த தமிழன்பர்களின் குதூகலத்துக் கிடையில் தமிழ்த் திருநாளின் தலைவர் சுதந்திர இந்திய சர்க்காரின் நிதி மந்திரி ஸ்ரீ சண்முகம் செட்டியார் பேசினார்.

சபையோர்களை அழைத்துக் கொண்டு உலகத்தில் உள்ள எல்லாக் கோயில்களையும் காண்பித்து விட்டுத் திருப்ப மதுரைக் கோயிலுக்கு அழைத்து வந்தார். உலகத்தில் வேறு எங்குமே இல்லாத கலைச் செல்வம் நிறைந்த இந்தக் கோயிலிலே தமிழ்த்திருநாள் நடப்பது எவ்வளவு பொருத்தம் பார்த்தீர்களா என்று கேட்டார். இந்த அருமையான திருநாளை மதுரையிலே கொண்டாட ஏற்பாடுசெய்த தமிழ் வளர்ச்சிக் கழகத்தாரைப் பாராட்டி விட்டு நேரே பாகிஸ்தானத்துக்குப் போனார். அங்கே சிந்து நதிக்கரையில் புதைந்து கிடந்து சில காலத்துக்கு முன்பு வெளிப்பட்ட மொகன்ஜு தாரோ, ஹரப்பா என்னும் நகரங்களுக்குப் போய் எத்தனையோ ஆயிர வருஷங்களுக்கு முன்னே அங்கு வாழ்ந்த மக்கள் வழங்கிவந்த நாணயங்களை எடுத்துக் காட்டினார். "இதிலிருக்கும் உருவத்தைப் பார்த்தீர்களா? இந்தச் சிவபெருமான் உருவத்தைப் பாருங்கள். இதிலிருந்து நீங்கள் என்ன தெரிந்து கொள்கிறீர்கள்? ஒருகாலத்தில் தமிழர்கள் இந்தியா முழுவதிலும் ஆட்சி செலுத்தினார்கள் என்று தெரிகிறதா, இல்லையா?" என்று கேட்டார்.

எல்லா மதங்களிலும் புரோகிதர்கள் மந்திரங்களை ஜனங்களுக்குத் தெரியாத பாஷையில் மூடுமந்திரமாக வைக்கப் பார்ப்பது வழக்கம் என்பதை விரிவாகச்சொல்லி விட்டு, ஒரு சிறு கதையையும் சொன்னார். பாவ மன்னிப்புக்காகப் பணத்தை வாங்கிக் கொண்டு சீட்டுக் கொடுத்த பாதிரியின் புத்திசாலித்தனத்தையும், பின்னால் பாவம் செய்வதற்கும் சேர்த்து 'அட்வான்ஸ்' சீட்டுக் கொடுத்துவிட்டுப் பிறகு கையிலிருந்த பணத்தையும் சேர்த்துப் பறி கொடுத்த காட்சியையும் காண்பித்தார்.

பாதிரியாரிடமிருந்து மறுபடியும் கோவி
க்குள் வந்தார். அங்கு தமிழர்கள் பூவினால்
ர்ச்சனை செய்து பூசை செய்து கொண்
ருந்ததைக் காண்பித்தார். 'பூசை'
ன்றால் 'பூவினால் செய!' என்று அர்த்தம்
ன்றும், தமிழருக்குரிய 'பூசை'யைப்
சாரிகள் 'பூஜை' என்று மாற்றி
ட்டார்கள் என்றும் சொன்னபோது,
பையிலிருந்த ஜனங்கள் கைகொட்டிச்
ர்த்துப் பெரும் ஓசை உண்டாக்கினார்கள்.

விஞ்ஞானக் கலைகளைத் தமிழர்கள் தமிழ்
மாழியிலேயே படிக்க வேண்டுமென்றும்,
னால் விஞ்ஞானச் சொற்களை அப்படி
ப்படியே எடுத்து உபயோகிக்க வேண்
மே தவிர மொழி பெயர்க்கக் கூடா
என்றும், ஆங்கில மொழியிலேயே
0-க்கு 70 வீதம் கடன் வாங்கிய
சாற்கள்தான் என்றும் சொல்லித் தனித்
மிழ் வாதிகளுக்கு அறிவுறுத்தினார்.

தமிழ்நாட்டில் தமிழர்கள் பேசும்போது
மிழையும் ஆங்கிலத்தையும் கலந்து
லந்து பேசும் வழக்கத்தை நகைச்சுவை
டன் கூறிக் கண்டனம் செய்தார்.

"தமிழ்மொழியிலுள்ள பழைய இலக்கியச்
செல்வங்கள் எல்லாம் மகா மகோபாத்தி
ய ஸ்வாமிநாத ஐயர் அவர்களால்தான்
மிழர்களுக்கு இன்று கிடைத்திருக்கின்
ன; — இல்லா விட்டால் அவ்வளவும்
ாயே போயிருக்கும்!" என்று சொல்லித்
மிழ்த் தாத்தாவுக்குத் தமிழரின் சார்பாக
ன்றி செலுத்தினார்.

கடைசியாக, மொழி வளருவதற்குத்
மிழ் நாட்டில் உள்ள ஒவ்வொரு ஊரிலும்
ராடரி கிளப்'புகளைப்போன்ற சங்கங்கள்
ற்பட வேண்டும் என்றும், அங்கே எல்லா
ஷயங்களையும் தமிழிலேயே பேசித்
மிழிலேயே விவாதிக்க வேண்டும் என்றும்
சால்லித் திருநாள் தலைவர் தமது சொற்
பாழிவை முடித்தார்; சபையோர் சந்
தோஷ ஆரவாரம் செய்தனர்.

★

ஜனங்களின் உற்சாகமான வரவேற்புக்
டையே நமது உள்நாட்டு மந்திரி டாக்டர்
ப்பராயன் எழுந்து தமிழ் மணம் கமழப்
பினார். இந்தியாவின் நிதிமந்திரி பேசிய
ட்டைப் பக்கம் பக்கமாகத் திருப்பித்
மிழ் வளர்ச்சிக்கு முட்டுக்கட்டை போடும்
ற மொழி கலப்பில்லாத தனித் தமிழ்க்
ாரர்களைக் கூப்பிட்டு, "பார்த்தீர்களா!
ி மந்திரி சொன்னதைக் கேட்டீர்களா?"
என்று அதிகார தோரணையிலே கேட்டார். "கலைச் சொற்களை அப்படியே தமிழில் சேர்த்துக் கொள்வது தான் நியாயம். அப்பொழுதுதான் தமிழும், தமிழ்க்கலையும், தமிழ்நாடும் வளரும்; நாமும் உலகத்தோடு ஓட்டி வாழலாம்" என்று வற்புறுத்தினார்.

உடல் நலக் குறைவையும் கவனியாமல் தமிழின்மேல் உள்ள ஆர்வத்தால் தமிழ்த் திருநாளில் கலந்துகொண்ட பேராசிரியர் திரு சோமசுந்தர பாரதியார் 'தொல்காப்பிய'த்தைப் பற்றி அரியதொரு சொற்பொழிவாற்றினார்.

குமாரராஜா ஸ்ரீ முத்தையா செட்டியார் தமிழ் வளர்ச்சிக் கழகத்தாரை வாயார வாழ்த்தி விட்டுத் தமிழ்மொழியை அபிவிருத்தி செய்வதோடு நின்று விடாமல் தமிழ் இசையையும், தமிழ்க் கலைகளையும், தமிழர் பண்பாட்டையும் பாதுகாத்து வளர்ப்பதற்கு இது போன்ற திருவிழாக்களை அடிக்கடி கொண்டாட வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

"நாம் எந்தவிதமான ஆகாரங்களை உட்கொண்டாலும் அது இரத்தத்துடன் கலந்து நமது உடம்பு வளருவதற்கு உதவி செய்கிறது. அதனால் நமது உடல் அமைப்பிலே மாறுதல் ஒன்றும் ஏற்பட்டு விடுவதில்லை. அதுபோலப் பிறமொழிப் பதங்களைப் பக்குவப்படுத்திச் சேர்த்துக் கொண்டால் தமிழின் உருவம் கெட்டுவிடாது; வளர்ச்சியும் கெட்டு விடாது" என்று ஸ்வாமி சித்பவானந்தர் கூறியதோடு, தமிழ் வளர்ச்சிக்காக இன்னும் பல யோசனைகளையும் கூறினார்.

இப்படிச் சொற்பொழிவுகள் ஒரு பக்கம் நடந்து கொண்டிருக்கையில், சொற்பொழிவாளரில் சிலர் அடிக்கடி உபயோகித்த "ஏனென்றால்" என்ற வார்த்தைக்கும் "ஆகையினால்" என்ற வார்த்தைக்குமாகச் சபையிலே சிலர் தனித்தனி கட்சியாகப் பிரிந்துகொண்டார்கள். மொத்தம் எத்தனை "ஆகையினால்" விழுந்தது, எத்தனை "ஏனென்றால்" வந்தது என்று எண்ணிக் கணக்குப் போட ஆரம்பித்து விட்டார்கள். இந்த 'ஏனென்றால்' கட்சியும் 'ஆகையினால்' கட்சியும் வரவர வலுவடைந்து எண்ணிக்கை விஷயத்தில் விவாதம் தொடங்குவதற்கு முன்பாகத் திருவிழாவின் முதல் தினக் கூட்டம் இனிது முடிந்தது.

தமிழ்த் திருநாளில் சூரிய பகவானும் ஈடுபட்டு விட்டபடியால் நமது புகைப்பட



ஸ்ரீ ஆர். பி. சேதுப் பிள்ளை



கேப்டன் சேஷாத்திரிநாதன்



ஸ்ரீமதி ஆர். எஸ். ருக்மணி

நிபுணர்தான் சிரமப்பட்டாரே ஒழிய மகா நாட்டுக்கு ஒன்றும் சிரமம் ஏற்படவில்லை. ஆனால் மாலையில் வருணபகவானும் தமிழ்த் திருநாளில் கலந்து கொள்ள விரும்பியதால் மதுரைத் தமிழ் அன்பர்கள் கொஞ்சம் சிரமப்பட்டுப் போனார்கள்.

அன்று மாலை திறந்த வெளியில் பிரம்மாண்டமான பொதுக் கூட்டம் நடத்துவதற்குத் தமிழ்த் திருநாள் வரவேற்புச் சபையார் அமோகமான ஏற்பாடுகள் செய்திருந்தனர். சுமார் ஐம்பதினாயிரம் ஜனங்களுக்கு மேல் கூடியிருக்க வேண்டிய அந்தக் கூட்டம் வருண பகவானின் தமிழ் ஆர்வத்தால் திறந்த வெளியிலே நடக்க முடியாமற் போய்விட்டது. அந்தப் பொதுக் கூட்டத்தையும் தொடர்ந்து புது மண்டபத்திலேயே நடத்துவதென்று விழாக் கமிட்டியார் முடிவு செய்து அதை ஒலிபரப்பியில் சொன்னார்கள். சுமார் மூன்று மணி நேரத்துக்கு மேல் தமிழ் வெள்ளத்திலே மூழ்கிக் கிடந்த சபையோர் இருந்த இடத்திலேயே இருந்து பொதுக் கூட்டத்திலும் கலந்து கொள்ளத் தயாராகி விட்டனர்.

*

பொதுக் கூட்டத்துக்கு நமது மராமத்து மந்திரி கனம் பக்தவத்சலம் தலைமை வகித்தார். மக்களின் மனதை அவர் சிவகங்கைப் பக்கம் திருப்பிப் பெரியாற்றைக் காண்பித்தார். கொஞ்சகாலமாகப் பெரியாற்றில் தண்ணீர் இல்லாமல் சிவகங்கை தாலூக்காவில் உள்ள பயிர்கள் எல்லாம் வாடிக் கிடந்ததையும் வாடிய பயிரைப் பார்த்து விவசாயிகள் ஏங்கிக் கிடந்ததையும் காண்பித்தார். எதிர்பாராத விதமாக இன்று பெய்திருக்கும் மழை சிவகெங்கைத் தாலூக்கா பயிர்களைத் தலைநிமிரச் செய்திருப்பதுடன் விவசாயிகளுடைய மனதையும் குளிர வைத்திருக்கும் என்றார். இப்படிப்பட்ட அவசியமான மழை நமது தமிழ் விழாவிலும் கலந்து கொண்டது விழாவின் விசேஷத்தைத்தான் காண்பிக்கிறது என்று அவர் சொன்னவுடன், மண்டபத்துக்கு வெளியே அதுவரை சாதாரணமாகப் பெய்து கொண்டிருந்த மழை சற்று வேகமாக அடித்தது.

"விவசாயத்துக்கு மழை அவசியமல்லவா?" என்று கேட்டுவிட்டு மராமத்து மந்திரி தமிழ்ப் பயிர் செழிக்கப் பிரசங்கமாரி பொழிந்தார்.

புயலும் இடியும் கலந்து அடிப்பது போன்ற பெரிய குரலில் ஸ்ரீ முத்துசிவம் பேச ஆரம்பித்தார்.

கவிதா ரஸத்தை அனுபவித்து அந்த இன்பத்தை மக்களுக்கு அவர் எடுத்துச் சொல்லும்போது, உளம் உருகி உடலுருகி வியர்வை பெருகி மேற் சட்டை யெல்லாம் நனைத்து விட்டது. பிரசங்கத்தை முடித்துவிட்டு ஸ்ரீ முத்துசிவம் உணர்ச்சி வேகத்தில் அருகில் இருந்த மின்சார விசிறி மேல் ஆடிக் கொண்டே போய் விழும் சமயத்தில், அவரைக் காப்பாற்ற ஒரு தமிழ் அன்பர் எடுத்துக் கொண்ட முயற்சிக்குத் தமிழர்கள் நன்றி செலுத்த வேண்டும்.

ஸ்ரீ தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் நமது தமிழ் இலக்கியச் செல்வங்களின் சிறப்புக்களைக் கற்றோரும் மற்றோரும் களிப்புறும்படி எடுத்து இயம்பினார்.

உணர்ச்சி மயமான ஸ்ரீ ராசாக் கண்ணனாரின் சொற்பொழிவுடன் அன்றையப் பொதுக் கூட்டம் முடிவடைந்தது.



ஸ்ரீ பி. எம். கண்ணன்



ஸ்ரீ விந்தன்



ஸ்ரீ க. சந்தானம்

சொற் பொழிவுகளுக்குப் பிறகு இசைப் பொழிவு தொடங்கியது.

இசை அரசு எம். எம். தண்டபாணி தேசிகர் தமிழ் இசை பொழிந்தார்.

இதற்குள் மழைப் பொழிவு நின்றுவிட்ட படியால் மதுரை மகாஜனங்கள் திரு தேசிகரின் கச்சேரியை முன்னிட்டு மண்டபத்தின் முன் பக்கத்தில் முற்றுகையிட ஆரம்பித்து விட்டார்கள்.

ஸ்ரீ கோவிந்தசாமி நாயக்கரின் பிடிலும், ஸ்ரீ எஸ். வி. எஸ். நாராயணனின் மிருதங்கமும் ஸ்ரீ தேசிகரின் கச்சேரிக்கு மிகச் சிறப்பாக அமைந்திருந்தன.

கவியரசர் பாரதியாரின் மணிவாக்குப்படி தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செய்தார் தேசிகர். வீதிகளிலே வைத்திருந்த ஒலி பரப்பிகளுக்கு முன்னால், ஆயிரக் கணக்கான மக்கள் மெய் மறந்து நின்று தேசிகரின் தமிழிசையைக் கேட்டுக் கொண்டிருந்தனர். "பாட்டுக்கு ஒரு புலவன் பாரதியடா!" என்னும் பாட்டிற்கு அடிக்கு அடி மண்டபத்துக்கு உள்ளேயும் வெளியிலும் கரகோஷம் எழுந்தது. ராகமாலிகை பிரசாதம். "வாழிய செந்தமிழ், வாழ்க நற்றமிழர்!" என்ற வாழ்த்துப் பாடலுடன், முதல் நாளைத் தமிழ்த் திருநாள் இரவு பன்னிரண்டு மணிக்கு இனிது முடிந்தது.

★

மறுநாள் வெள்ளிக்கிழமை. தமிழ் மக்களின் ஏகோபித்த வேண்டுகோளுக்கிணங்கிச் சூரிய பகவானும் வருண பகவானும் அன்றைய தமிழ்த் திருவிழாவில் கலந்து கொள்ளாமல் தங்கள் வேலையைப் பார்க்கச் சென்றனர். அவர்களுடைய தியாக உணர்ச்சியை மதுரை நகரத்து மக்களுடன் சேர்ந்து நானும் மனமார வாழ்த்தி வணங்கினேன்.

காலைக் கூட்டத்தில் கலைமகள் ஆசிரியர் ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் "நாடோடித் தமிழ்" என்பது பற்றிச் சொற்பொழிவு ஆற்றினார். பிரசங்கத்தின் நடுநடுவே சில நாடோடிப் பாட்டுக்களையும் பாடிக் காண்பித்து, ஜனங்களை நாடோடிப் பாட்டுக்களைத் தேடிப் பிடிக்க ஆர்வங் கொள்ளும் படி செய்தார்.

"நல்ல தமிழ்" என்பதைப் பற்றிப் பேசிய திரு ஜி. சுப்ரமண்யப் பிள்ளை "நீங்கள் எல்லாரும் ஏனோ மகிழ்ச்சியுறுகிறீர்கள்! நான் துயர் உறுகிறேன்; பெரிதும் துயர் உறுகிறேன்!" என்று தொடங்கினார். சென்னைக்கு வடக்கே தமிழின் சிறப்பை யாரும் அறியாமலிருப்பது குறித்து அவர் அவ்வாறு வருத்தப் பட்டார். இறுதியில், "தமிழில் பேசவும் பாடவும் மனமில்லா விட்டால் தமிழில் வைதாவது தொலையுங்கள்! வைவதற்குத் தமிழைப்போல் சிறந்த மொழி இல்லை!" என்று கூறி, மேற்கோளாக ஒரு பாடலையும் கூறினார். பாணனைப் பார்த்து ராணி, "நீ என்றேன் நான்" என்று முடியும் பாடல்தான்.

"தமிழ் வளர்ச்சி" என்ற விஷயத்தைப் பற்றிப் பேசிய நாமக்கல் கவிஞர், "யாமார்க்கும் குடியல்லோம் நமனை யஞ்சோம்..." என்ற பாட்டை, தமக்கென்றே அமைத்துள்ள ராகத்தில் கம்பீரமாகப் பாடிவிட்டு, "தமிழ் மொழி என்பது மாங்காய் தேங்காய்போல மரத்திலே காய்த்து நம் கையில் விழுந்து விடவில்லை.

கற்பனைக்கு எட்டாத காலத்திலிருந்து அனேக ஆயிரம் ஆண்டுகளாகக் கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இறுகிய வயிரம்" என்று அறைந்தார்.

அருமையான தமிழில் ஸ்ரீ சுல்தான் முகம்மது கணீரென்று பேசினார்.

ஸ்ரீ ஆர். பி. சேதுப் பிள்ளை தமிழைப் பற்றி எப்போதுமே ஆர்வத்துடன் சொற்பொழிவு ஆற்றுகிறவர். தமிழ் விழாவிலே கேட்க வேண்டுமா? மதுரைமா நகர் தமிழ் வளர்த்ததைப் பற்றி இதற்கு முன் எல்லாரும் பேசி மதுரையை மிகவும் உயர்த்தி யிருந்தார்கள். அந்த மதுரையை ஸ்ரீ சேதுப் பிள்ளை அதல பாதாளத்தில் அழுத்தி விட்டார்! ஐரோப்பியர் ஒருவர் எத்தனையோ அருமையான தமிழ் ஓலைச் சுவடிகளைச் சேகரித்து வைத்திருந்தாராம். அவர் காலமான பிறகு அவருடைய உடைமைகள் எல்லாவற்றையும் ஏலம் போட்டார்களாம்! தமிழ்ச் சுவடிகளைக் காலணாவுக்குக் கூட யாரும் ஏலம் கேட்க முன்வரவில்லையாம்! அவ்வளவு சுவடிகளும் தீக்கு இரையாக்கப் பட்டனவாம்! "தமிழ் வளர்த்த மதுரையிலேதான் இதுவும் நடந்தது!" என்று ஸ்ரீ சேதுப் பிள்ளை ஆங்காரத்துடன் கூறியபோது, அத்தனை நேரமும் தலை நிமிர்ந்து நின்ற மதுரைக்காரர்கள் கொஞ்சம் தலையைக் குனிந்து கொண்டார்கள்.

பிறகு "சுதேசமித்திரன்" ஆசிரியர் ஸ்ரீ சி. ஆர். ஸ்ரீநிவாசன் தமிழ்த் தாயைத் தூக்கி அரசாங்கத்தின் அரியாசனத்தில் உட்கார வைத்து மகிழ்ந்தார். "இத்தனை நாளும் தமிழ் நமது தாய் மொழியாக மட்டும் இருந்தது. இப்போது அரசாங்க பாஷையாகி விட்டது!" என்று அவர் கூறியதைச் சபையோர் அனைவரும் ஆமோதித்துக் கரகோஷம் செய்தார்கள்.

சென்னை மாஜி ஷெரீப் ஸ்ரீ ராமஸ்வாமி நாயுடு பேசும்போது ஸ்ரீ மீனாக்ஷி அம்மன் கோயில் புது மண்டபத்தில் காணும் புது மலர்ச்சியையும் தமிழரின் பெருமையையும் தமிழர்களின் பேதைமையையும் புகழ்ந்து கூறி விட்டுத் தமிழகத்தைப் பின்பற்றி உலகம் நடக்கும்படி நாம் நடந்துகொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

திடீரென்று ஒரு காரசாரமான பேச்சு காதில் விழுந்தது. மேடையைப் பார்த்தேன். 'தொண்டன்' ஆசிரியர் ஸ்ரீ ஆறு முக நாவலர் கர்ஜனை புரிந்துகொண் டிரு தார். 'தனித் தமிழ், தனித் தமிழ்' என் சொல்லுகிறவர்கள் சொல்லும் காரண களை யெல்லாம் தம் முன்னே ஒவ்வொ றாக நிறுத்தி, கன்னத்தில் அறைகொடுத் அனுப்பினார். மலையாளம், ஆந்திர இலங்கை முதலிய இடங்களில் உள் தமிழர்களை யெல்லாம் ஒன்றுபடுத்தி இழ தமிழ் நாட்டையும் தமிழ்க் கலையையு வளர்க்க வேண்டும் என்பதே இந்த தமிழ்த் திருவிழாவில் என்னுடைய திட்ட என்று தெரியப்படுத்தினார்.

மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் காரி தரிசி ஸ்ரீ தி. கொ. கிருஷ்ணசாமி ஐயங்க தமிழ் மொழியின் உயர்வைப் பற் உயர்ந்த முறையில் பேசியபிறகு முற்பக நிகழ்ச்சிகளும் முடிவடைந்தன.

★

தமிழ்த் திருவிழா எந்த நோக்க துடன் நடத்தப்பட்டதோ, அந்த முக்கி நிகழ்ச்சி, அதாவது நூலாசிரியர்களுக்கு பரிசு வழங்குதல் இரண்டாம் நாள் பிற்பக நடைபெற்றது. எனவே, சபையில் கூட் மும் அபரிமிதமாக இருந்தது.

தமிழ் வளர்ச்சியில் பெண்மணிகள் ஈ படவில்லை யென்று யாரும் குறை சொல் முடியாதபடி ஸ்ரீமதி லக்ஷ்மி பாரதி அவ களும், ஸ்ரீமதி ராமசுப்பிரமண்யம் அவ களும் பேசியபிறகு, தமிழ் வளர்ச்சிக் கழ கத்தின் காரியதரிசி ஸ்ரீ பெரியசாமி தூர கழகத்தின் அறிக்கையை வாசித்தார்.

1946-ம் வருஷம் டிசம்பர் 17 கல்வி மந்திரி ஸ்ரீ அவினாசிலிங்கம் அவ களின் வீட்டில் தமிழ் அன்பர்கள் கூடி தமிழ் வளர்ச்சிக் கழகம் ஆரம்பித்த லிருந்து இன்றுவரை கழகம் செய்திரு கும் வேலைகளை விவரித்தார். பிறகு தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பரிசுத் திட் டத்தைப் பற்றிக் கூறினார்.

பிரதி வருஷமும் தமிழில் வெளியாகு புத்தகங்களைப் பன்னிரண்டு விஷயப் பகு களாகப் பிரித்து, வருஷத்துக்கு ஆ பகுதிகளுக்கு ஆறு பரிசுகள் கொடுப்ப தான் திட்டத்தின் முக்கிய அம்சம். 1946-ம் வருஷத்தில் வெளியான தமி நூல்களில் கட்டுரை, விஞ்ஞானம் ஆராய்ச்சி, பொருளாதாரம், சிறு கதை, நாவல் ஆகிய ஆறு பகுதிகளு குப் பரிசு கொடுப்பதென்று ஏற்பாடு இந்த ஆறு பகுதிகளுக்கும் அறுபத்தைந்து

எழுத்தாளர்கள் எழுதிய எழுபத்தநாலு புத்தகங்கள் பரிசீலனைக்கு வந்தன. இவை பத்தொன்பது வெளியீட்டகங்களில் பிரசுரிக்கப்பட்டவை. ஒவ்வொரு பகுதிக்கும் மூன்று பேர் வீதம் பதினெட்டு நீதிபதிகள் புத்தகங்களைப் பரிசீலனை செய்ய நியமிக்கப்பட்டார்கள். நீதிபதிகளின் பெயர்களை வரிசையாக ஸ்ரீ பெரியசாமி படித்தபோது எல்லாருக்கும் கைகால்கள் நடுங்கின! அவ்வளவு பிரபலமான பெயர்கள். பரிசு பெற்ற புத்தகங்கள்—ஆசிரியர்கள் பெயர்களையும், மேற்படி புத்தகங்களை வெளியிட்ட பதிப்பகங்களின் பெயர்களையும் ஸ்ரீ பெரியசாமி தெரியப்படுத்தினார் :—

| | விஷயம் | நூலின் பெயர் | ஆசிரியர் | பதிப்பகம் |
|---|---|---|---|---|
| 1. | கட்டுரை | இந்தியச் சிற்பக்கலை | ஆர். எஸ். ருக்மணி எம். ஏ. | புத்தக நிலையம், புதுக்கோட்டை |
| 2. | விஞ்ஞானம் | உயிர் மரபு | கேப்டன் சேஷாத்ரிநாதன் | கலைமகள் காரியாலயம், சென்னை |
| 3. | ஆராய்ச்சி | தமிழகம் - ஊரும் பேரும் | ஆர். பி. சேதுப்பிள்ளை | அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை |
| 4. | பொருளாதாரம் | செல்வம் | கே. சந்தானம் | சக்தி காரியாலயம், சென்னை |
| 5. | சிறுகதை | முல்லைக்கொடியாள் | "விந்தன்" | ஸ்டார் பிரசுராலயம், திருச்சி |
| 6. | நாவல் | வாழ்வின் ஒளி | பி. எம். கண்ணன் | கலைமகள் காரியாலயம், சென்னை |

இவ்விதம் பரிசு பெற்ற புத்தகங்கள்—ஆசிரியர்களைப் பற்றிய விவரங்களைத் தெரியப்படுத்திவிட்டு, மற்றும் ஆறு விஷயங்களைப் பற்றிய புத்தகங்களை 1947-ல் வெளியான புத்தகங்களோடு சேர்த்துப் பரிசீலனை செய்து பரிசு வழங்கப்படும் என்று தெரிவித்தார்.

இன்னும் ஒரு ரஸமான விஷயமும் கழகத்தின் காரியதரிசி படித்த அறிக்கையில் இருந்தது. அதாவது, தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் தலைவர், உபதலைவர்கள், காரியதரிசிகள் ஆகிய இவர்கள் எழுதிய புத்தகங்களைப் பரிசுத் திட்டத்துக்குச் சேர்த்துக் கொள்ளுவதில்லை யென்று முன்னதாகவே தீர்மானம் செய்து விடப்பட்டதாம்! நல்ல காரியந்தான்! இதனால் கழகத் தலைவர் கனம் டி. எஸ். அவிநாசிலிங்கம், நூலாசிரியர் டி. எஸ். அவிநாசிலிங்கத்துக்குப் பரிசு கொடுத்துக் கொள்ள வேண்டிய அவசியம் சேராமற் போய் விடுமல்லவா?

★

கல்வி மந்திரி ஸ்ரீ டி. எஸ். அவிநாசிலிங்கம் 1946-ம் வருஷத்துப் பரிசுகளை வழங்குவதற்காக எழுந்ததும் சபையில் பெரிய கரகோஷம் உண்டாயிற்று. "இந்தத் தமிழ்த் திருநாளில் கலந்து கொள்ளக் கூடிய சந்தர்ப்பம் கிடைத்தது பற்றி மகிழ்ச்சி அடைகிறேன்!" என்று கல்வி மந்திரி தமது பேச்சைத் தொடங்கியதும் எல்லாருடைய முகத்திலும் ஒரு புன்னகை தோன்றி மறைந்தது. தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் வேலைகளில் ஸ்ரீ பெரியசாமி சொல்லாமல் விட்டவைகளைப் பற்றிக் கல்வி மந்திரி விவரித்தார். தமிழ் வளர்ச்சிக்காகச் சென்னை சர்க்கார் செய்து வரும் பிரயத்தனங்களைப் பற்றியும் கூறினார். இன்று வழங்கப்போகும் ஆறு பரிசுகளில் நாலு பரிசுகள் சென்னை சர்க்கார் அளித்த நன்கொடை என்றும் தெரியப்படுத்தினார். இம்மாகாணத்திலுள்ள நாலு பாஷைகளிலும் நாலு கவிஞர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களை இராஜாங்கக் கவிகளாக்கி ஆண்டுதோறும் சன்மானம் அளிக்க உத்தேசித்திருப்பதையும் எடுத்துக் கூறினார். "கலைக் களஞ்சியம்" தயாரிக்கும் மகத்தான முயற்சியைத் தமிழ் வளர்ச்சிக் கழகம் மேற் கொண்டிருப்பது பற்றித் தெரிவித்தார். கடைசியாக, கழகத்துக்கு எல்லாரும் ஒத்துழைப்பு அளிக்க வேண்டுமென்று உருக்கமாக வேண்டிக் கொண்டார்.

★

பிறகு பரிசு பெற்றவர்கள் ஒவ்வொருவராக மேடைக்கு அருகில் வந்து கல்வி மந்திரி அளித்த அத்தாட்சிப் பத்திரத்தையும் ஐந்நூறு ரூபாய் செக்கையும் பெற்றுக் கொண்டார்கள். பரிசு பெற்றுக் கொண்டவர்களைக் காட்டிலும் பரிசு கொடுத்த கல்வி மந்திரி மிகவும் அடக்க ஒடுக்க வணக்கத்துடன் நடந்து கொண்டதைச் சபையோர் மிகவும் பாராட்டினார்கள்.

பரிசுபெற்ற ஆறுபேரில் நால்வர் நேரில் வந்து பரிசுகளைப் பெற்றுக் கொண்டார்கள்.

ஸ்ரீமதி ஆர். எஸ். ருக்மணி அமெரிக்காவுக்கு மேற் படிப்புக்காகச் சென்றிருந்தபடியால், அவருக்குப் பதிலாக அவருடைய தந்தையார் ஸ்ரீ இராஜ சூடாமணி பரிசு பெற்றுக் கொண்டார். புதுடில்லி "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" தினசரி ஆசிரியரும், அரசியல் நிர்ணய சபை அங்கத்தினருமான ஸ்ரீ கே. சந்தானம் நேரில் வரமுடியாதபடியால், பரிசு பெற்றதைப் பற்றித் தமது பெரு மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கடிதம் எழுதியிருந்தார்.

அடுத்த ஆண்டு தமிழ்த்திருநாளை நடத்துவதற்கு மூன்று இடங்களிலிருந்து அழைப்பு வந்தது. தர்மபுரம் மடத்தின் பிரதிநிதியாக வந்திருந்த தம்பிரான் சுவாமிகள் வைத்தீசுவரன் கோயிலில் நடத்தும்படியாக அழைத்தார். கோவை ஜில்லா காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ வி. சுப்பிரமண்யம் கோயமுத்தூருக்கும், மாஜி ஷெரிப் ஸ்ரீ ராமசாமி நாயுடு சென்னைக்கும் அழைத்தார்கள். ஒவ்வொரு அழைப்புக்கும் சபையில் பலத்த கரகோஷமாயிருந்தபடியால், எந்த அழைப்பை ஒப்புக்கொள்வது என்பது பற்றிப் பிற்பாடு தீர்மானிக்கலாம் என்று தலைவர் கூறினார்.

தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் சார்பாகக் "கல்கி" ஆசிரியர் தமிழ்த்திருநாளை நடத்திய மதுரை அன்பர்களுக்கு நன்றி கூறினார். இரண்டு தினங்களாகத் தமிழன்பை முன்னிட்டுப் புதுமண்டபத்தில் மணிக்கணக்காக அசையாது உட்கார்ந்திருந்தவர்களின் அலுப்பும் களைப்பும் 'கல்கி' ஆசிரியரின் அரை மணி நேரப் பேச்சைக் கேட்டுச் சிரித்து மகிழ்ந்ததில் தீர்ந்து போயின. 'கல்கி' ஆசிரியரின் அன்றையப் பேச்சைக் கேட்ட சபையோரில் சிலர் 'இயற்தமிழ்,' 'இசைத்தமிழ்' 'நாடகத் தமிழ்' என்னும் முத்தமிழோடு, நாலாவதாக 'நகைச் சுவைத் தமிழ்' என்பதையும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று அபிப்பிராயப்பட்டார்கள்.

திருவிழாத் தலைவர் ஸ்ரீ ஆர். கே. சண்முகம் அவர்களும், வரவேற்புத் தலைவர் ஸ்ரீ பி. டி. ராஜன் அவர்களும் முடிவுரையாகச் சில வார்த்தைகள் கூறிய பிறகு திருநாள் இனிது முடிந்தது.

★

முடிந்ததா? இல்லை, இல்லை. அப்புறமும் கானகலாதர மணி ஐயரின் தமிழிசைப் பொழிவு இருந்தது. மதுரை தமது சொந்த ஊர் என்ற காரணத்தினால்தானோ என்னமோ, மணி ஐயர் அன்று மணி மணியாகப் பாடி ஜமாய்த்து விட்டார். மணி ஐயரின் கச்சேரி அவ்வளவு விறுவிறுப்பாக ஆரம்பித்து நடந்ததை இதற்கு முன் பார்த்ததே கிடையாது. ஐந்து உருப்படிகளை, ஒவ்வொன்றுக்கும் ஸ்வரத்தோடு முக்கால் மணி நேரத்தில் பாடிவிட்டார் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்- பிறகு, காம்போதி ராகத்தை எடுத்து விஸ்தாரமாக ஆலாபனம் செய்தபோது அந்தப் புது மண்டபம் இன்னும் பல காலத்துக்கு 'நாத சங்கீத மணி மண்டப'மாக விளங்கும் என்று ரஸிகர்கள் கருதினார்கள். இதற்குள் ரயில் புறப்படும் நேரம் வந்துவிடவே சென்னையிலிருந்து வந்தவர்கள் அந்த அற்புதமான கச்சேரியின் மத்தியில் புறப்பட வேண்டியதாயிற்று. மண்டபத்தின் வாசலுக்கு வந்தபோது, "காணக் கண் கோடி வேண்டும்" என்று மணி ஐயரின் கணீரென்ற குரலில் கேட்டது.

ஆம்; மதுரையில் நடந்த தமிழ்த் திருநாள் வைபவங்களைக் காணக் கோடி கண்கள் வேண்டுந்தான்; அங்கு நிகழ்ந்த தமிழிசைக் கச்சேரிகளைக் கேட்கக் கோடி காதுகளும் வேண்டுந்தான்!!




ஒரு கரடியும் நாயும் ஒரு புலியிடம் வேலைக்கு அமர்ந்திருந்தன. ஒரு நாள் இரவு புலியின் பணப் பெட்டி இருந்த அறையில் ஏதோ சத்தம் கேட்டது. நாய் மெதுவாக எழுந்து, "அறையில் என்ன சத்தம்?" என்று எட்டிப் பார்த்தது. யாரோ இரும்புப் பெட்டியைத் திறந்து நகைகளை எடுத்துக் கொண்டிருப்பது தெரிந்தது. உடனே அதற்கு ஒரு யோசனை தோன்றியது. உள்ளே இருக்கும் திருடன் வெளியே வராதபடி 'தடால்' என்று கதவைத் தாளிட்டு விட்டுத் திருடன் பிடிபட்ட சமாசாரத்தைப் புலியிடம் சொல்ல நாய் ஓடிற்று.

நாய் ஓடும் சமாசாரத்தை அறிந்த கரடி, "நாயே, நீ பேசாமல் இரு!" என்று சொல்லி விட்டுப் புலியிடம் சென்று, தான் திருடனை அறைக்குள் வைத்துப் பூட்டி விட்டு வந்திருப்பதாகச் சொல்லிற்று. கரடியின் சமார்த்தியத்தைப் புலி மிகவும் மெச்சிற்று. திருடனைப் பிடிப்பதற்காகப் புலியும் கரடியும் மெதுவாக இரும்புப் பெட்டி இருந்த அறையை நோக்கி வந்தன.

கதவு திறக்கப்பட்டது. ஆனால் உள்ளே திருடன் இல்லை. அதற்குப் பதிலாகப் புலியின் மனைவி மூர்ச்சையுற்றுப் படுத்துக் கொண்டிருந்தது. கோபமடைந்த புலி, "என்ன, கரடியாரே! இது என்ன அயோக்கியத்தனம்! பெட்டியில் நகைகளைக் கழற்றி வைக்க வந்த என் மனைவியை வைத்துப் பூட்டிவிட்டு, என்னிடம் திருடனைப் பிடித்து விட்டதாகப் பொய் சொன்னீரே?" என்று கோபத்துடன் உறுமியது.

கரடி நடுங்கிப் போய் விட்டது. மூலையில் பதுங்கியிருந்த நாய் 'தப்பினோம், பிழைத்தோம்!' என்று அவ்விடத்தை விட்டு அகன்றது.

இந்தச் சம்பவம் நடந்தது முதல் கரடி, நாயை எப்படியாவது துன்புறுத்த வேண்டும் என்று நிச்சயித்திருந்தது. ஒரு நாள் நல்ல உடைகளை அணிந்து கொண்டு கரடியும் நாயும் வெளியில் உலாவச் சென்றன. அப்பொழுது வழியில் ஒரு முள் வேலி குறுக்கிட்டது. அரை நொடியில் அந்த முள் வேலியைத் தாண்டிய கரடி, நாயையும் அப்படியே தாண்டும்படிச் சொல்லிற்று. கரடிக்குப் பயந்த நாய், மெதுவாக முள் வேலியின்மேல் ஏறி அடுத்த பக்கத்தில் குதித்தது. ஆனாலும் எப்படியோ அந்த முள் வேலியில் சிக்கிக் கொண்டு நாயின் உடைகள் கிழிந்தன. அதன் உடம்பிலும் பல காயங்கள்!

இந்தச் சமயத்தில் அங்கே உட்கார்ந்து கொண்டிருந்த ஒரு வயது முதிர்ந்த குருட்டு முயல், "ஐயா, பிச்சை கொடுங்கள்!" என்று கேட்டது. முயலைப் பார்த்த கரடி அலக்ஷியமாகச் சென்றது. ஆனால்

நாயோ, "என்னிடமுள்ளது இது தான்!" என்று சொல்லி, தன்னிடமிருந்த ஒரே ஒரு காலணாவை எடுத்து அதனிடம் கொடுத்தது.

என்ன ஆச்சரியம்! உடனே அந்தக் குருட்டு முயல் இருந்த இடத்தில் ஒரு வன தேவதை தோன்றியது. "ஏ, நாயே! நீ அணிந்து கொண்டிருக்கும் கிழிந்த உடுப்புகளைப் பார்த்தால் மிகவும் ஏழையான நாயைப் போலத் தோன்றுகிறது. உன்னுடைய தர்ம குணத்தை நான் மிகவும் மெச்சுகிறேன். உனக்கு வெகு சீக்கிரத்திலேயே ஒரு வெகுமதி கிடைக்கும்!" என்று தன்னிடமிருந்த மந்திரக் கோலினால் நாயைத் தடவி விட்டு வன தேவதை மறைந்தது.

உடனே நாயின் மீதிருந்த கிழிந்த வஸ்திரங்களெல்லாம் நல்ல வஸ்திரங்களாக மாறின. அதன்மீது இருந்த காயங்களும் மறைந்தன. இச் சம்பவங்களைப் பார்த்த கரடிக்குப் பொறாமை உண்டாயிற்று. "இருக்கட்டும், இருக்கட்டும்; உனக்குச் சரியான பாடம் கற்பிக்கிறேன்!" என்று அது நாயைப் பார்த்துத் தனக்குத் தானே சொல்லிக் கொண்டது.

**வ**ழியில் ஒரு மரக் கிளையில் உட்கார்ந்திருந்த பெரிய கழுகு ஒன்று, கரடியின் கண்ணில் பட்டது. உடனே கரடி, "ஏ, பருந்தே! இந்த நாயை மேலே தூக்கி உனக்கு இஷ்டமான இடத்தில் கீழே போட்டுவிடு; நான் உனக்கு வேண்டிய பணம் தருகிறேன்!" என்று சொல்லிற்று.

கழுகு அடுத்த நிமிஷம் நாயைத் தன் மூக்கினால் தூக்கிக்கொண்டு மேலே சென்றது.

கொஞ்ச தூரம் சென்றதும், கழுகு ஒரு சர்க்கஸ் கூடாரத்தின் மேலிருந்த துவாரத்தின் வழியாக நாயைத் தொப்பென்று கீழே போட்டு விட்டுப் பறந்து சென்றது.



ஆனால் அதிர்ஷ்டவசமாக நாய் கீழே விழவில்லை; அப்பொழுது கூடாரத்தின் நடுவில் நின்று கொண்டிருந்த யானையின் மீது விழுந்தது! யானை அந்த நாயைச் சுமந்து கொண்டு சுற்றிச் சுற்றி வந்தது. உடனே சர்க்கஸ் பார்க்க வந்திருந்த மிருகங்களெல்லாம் பலத்த கரகோஷம் செய்தன. அந்த மிருகங்களுக்கு யானை மீது நாய் சவாரி செய்வது ரொம்பவும் வேடிக்கையாயிருந்தது.

சர்க்கஸ் கம்பெனியின் மானேஜரான ஓநாய்க்குச் சந்தோஷம் தாங்கவில்லை. நாய்க்கு மாலை போட்டு ஒரு பண முடிப்பையும் அதன் கையில் கொடுத்தது.

நாய்க்கு ஒன்றும் புரியவில்லை. "எனக்கு எதற்குப் பணம்?" என்று அது ஓநாயைப் பார்த்துக் கேட்டது.

"நாயே, நீ மிகவும் தைரியசாலி! இந்த மதம் பிடித்த யானையின்மீது யார் சவாரி செய்கிறார்களோ, அவர்களுக்கு ஆயிரம் ரூபாய் இனாம் என்று பல நாட்களாக நாங்கள் விளம்பரம் செய்தும், ஒரு மிருகமாவது அதன் மீது ஏற முன் வரவில்லை. நீதான் இன்று அதன்மீது தைரியமாக ஏறிச் சவாரி செய்தாய்!" என்று ஓநாய் சந்தோஷத்துடன் சொல்லிற்று.

"கழுகு என்னைத் தூக்கிக் கீழே போட்டதால் அல்லவா எனக்குப் பரிசு கிடைத்தது? வனதேவதை சொன்னது உண்மையாகப் போய்விட்டதே!" என்று நாய் கழுகையும் வன தேவதையையும் வாயாரவாழ்த்திற்று. இந்தச் செய்தியைக் கேள்விப்பட்ட கரடியோ அவமானம் தாங்க முடியாமல் அந்தக் காட்டை விட்டே ஓடி விட்டது. தோல்வி மேல் தோல்வி அடைந்த கரடி எப்படி நாயின் முகத்தில் விழிக்க முடியும்?

ஆனால் கழுகுதான் அந்த வன தேவதை என்பது நாய்க்குத் தெரியவே தெரியாது!




மணி

"யாகுப்! நேற்று உஜாலாவின் நடனத்தைப் பார்த்தாயல்லவா? அவ்வளவு அற்புதமான நடனத்தை நான் இப்போதுதான் பார்த்தேன்!" என்றான் பீஜபூர் சுல்தான். அவன் குரலில் குதூகலம் ததும்பிக் கொண்டிருந்தது.

மந்திரி யாகுப் மௌனமாக நின்றான்.

"உஜாலாவைப் போன்ற அற்புதமான பிறவி இந்த உலகத்தில் வேறு யாருமே இருக்க முடியாது. இல்லையா யாகுப்?" என்றான் மீண்டும்.

அரசனின் உள்ளக் குமுறலை உணர்ந்து கொண்டான் யாகுப். சுல்தான் தன் விரலில் அணிந்திருந்த மோதிரத்தைக் கழற்றி அவனிடம் கொடுத்து, "என்னுடைய அன்பின் காணிக்கையாக இதை அவளிடம் கொடு! அவளுக்கு அந்தப்புரத்தில் ஒரு இடமும் அளிக்கப்பட வேண்டும்" என்றான்.

"பாதுஷா! ஒரு வார்த்தை! அவள் ஓர் ஏழை; மேலும் ஒரு நடன மாது; ஒரு பட்டமகிஷியின் பதவிக்கு அவள் ஏற்றவளா?"

"என் உள்ளத்தை இன்னும் நீ உணரவில்லை, யாகுப்! என்னுடைய இருதயத்தில் பொங்கி எழும் உணர்ச்சியின் வேகத்தை அவள் ஒருத்தியால்தான் அடக்க முடியும். உடனே அவளை ஹுஜுறுவிற்கு அழைத்து வா!" என்றான் சுல்தான்.

யாகுப் அதற்கு மேல் அரசனை எதிர்த்து ஒன்றும் சொல்லவில்லை.

* * *

சுல்தானுக்கு நடனத்தில் அளவற்ற ஆசை உண்டு என்பது உசேனுக்குத் தெரியும். ஆகவேதான் தன் மகளான உஜாலாவுடன் சுல்தானிடம் வந்திருந்தான் உசேன். சுல்தான் உஜாலாவின் நடனத்தில் லயித்துப் போய் நிறைய வெகுமதிகள் கொடுத்தான். அத்துடன் அவன் நின்றிருக்கக் கூடாதா?

அழகான ஆபரணங்களை அணிந்து கொண்டு அரண்மனைக்குச் சற்றுத் தூரத்திலிருந்த விடுதியில் இருந்தாள் உஜாலா. அவள் மனம் தன் இதயத்தைக் கொள்ளை கொண்ட ஷிராஸைப் பற்றி எண்ணிக் கொண்டிருந்தது. ஷிராஸ் ஒரு சிறந்த சிற்பி. அவனுடைய சிற்பங்கள் ஒவ்வொன்றும் உயிருள்ளதாகவே இருக்கும். முதல் முதலில் அவனுடைய கலையில் மயங்கிய உஜாலா, நாளாவட்டத்தில் அவனிடமே ஆழ்ந்த அன்பு கொண்டு விட்டாள்!

"உஜாலா!" என்று யாரோ கூப்பிட்ட பிறகுதான் அவளுக்குத் தன் நினைவு வந்தது. திரும்பிப் பார்த்தாள்; புன்னகை பூத்த முகத்துடன் யாகுப் எதிரில் நின்று கொண்டிருந்தான்.

"உஜாலா! சுல்தான் மற்றொரு காணிக்கையையும் உனக்கு அனுப்பியிருக்கிறார்!" என்று கூறிக்கொண்டே மோதிரத்தை அவளிடம் கொடுத்தான்.

உசேன் யாகுப்பைக் கண்டவுடன் 'ஸலாம்' செய்தான்.

"உசேன்! உனக்கு அல்லாவின் பூரண ஆசி இருக்கிறது. சுல்தான் உண்மையில் உஜாலாவின் நடனத்திற்கு அடிமையாகி விட்டார்!"

உசேனால் ஒன்றுமே பேச முடியவில்லை.

"ஆனால் ஒரு விஷயம், உசேன்!" என்று கூறிக்கொண்டே அவன் அருகில் சென்று, "உஜாலாவை அரசர் நேசிக்

கிறார். அவனை ஜனானாவுக்கு அனுப்பி வைக்க வேண்டும்."

திகைத்து நின்றான் உசேன்! உஜாலாவின் கையிலிருந்த மோதிரம் 'தொப்' என்று கீழே விழுந்தது.

"அரசர் என்னை நேசிக்கிறாரா! என்னையா நேசிக்கிறார்!" என்று திகைப்புடன் கேட்டாள்.

"உஜாலா! நீ நேற்றுவரை ஒரு நடனமாது. ஆனால் இன்றுமுதல் ஒரு பட்டமகிஷி!" என்றான் யாகுப்.

உஜாலாவுக்குக் கோபமும் துக்கமும் மாறி மாறி வந்தன. 'தொப்' என்று யாகுப்பின் பாதத்தடியில் விழுந்து முகத்தை மூடிக்கொண்டு விசித்தாள்.

"என்னை மன்னியுங்கள், ஹுஜூர்! நான் ஷிராஸைத்தான் மனப்பூர்வமாய் நேசிக்கிறேன். அந்தச் சிற்பிக்காகத்தான் நான் உயிர் வாழ்கிறேன். எனக்கு அனுமதி கொடுங்கள். நான் இப்போதே இந்த எல்லையை விட்டு வெளியேறி விடுகிறேன்!" என்றாள்.

அவளுடைய உதடுகள் துடித்தன. கண்ணீர்த் துளிகள் முத்து முத்தாக உதிர்ந்தன.

யாகுப்பிற்கு ஷிராஸைப் பற்றி எல்லாம் தெரியும். அவன் ஒரு சிறந்த கலைஞன் என்பதையும் அவன் அறிவான். ஆனால் சுல்தானின் பிடிவாதத்தை யாரால் தடுக்க முடியும்?

"உஜாலா, சுல்தான் உன்னிடம் அன்பு கொள்வதற்கு நீ எவ்வளவோ பெருமைப்பட வேண்டும். உனக்கு வரப் போகும் செல்வாக்கையும் பெருமையையும் யோசித்துப் பார்! சுல்தான் உன்னுடைய நடனத்தைக் கண்டு மெச்சவில்லையா? புகழவில்லையா? அதற்கெல்லாம் நீ செய்யும் பிரதிபலன் இதுதானா?"

"நான் ஷிராஸைத் தான் மனப் பூர்வமாய் நேசிக்கிறேன்!" என்று பிடிவாதமான குரலில் சொன்னாள் உஜாலா.

"உஜாலா! நீ நேசிக்கும் ஷிராஸுக்கு உன்னுடைய பிடிவாதத்தினால் ஆபத்து நேருவதை நீ விரும்புகிறாயா? யோசித்துப் பார் — சுல்தானின் விருப்பத்தை யாராலும் தடுக்க முடியாது!"

"இல்லை! ஷிராஸுக்குத் தீங்கு நேர நான் பார்த்துக் கொண்டிருக்க மாட்டேன். அதற்குப் பதிலாக என்னையே நான் தியாகம் செய்து கொள்வேன்!" என்றாள் உணர்ச்சியின் வேகத்தில்.

சற்று நேரம் மௌனமாக இருந்தாள். பிறகு எழுந்து நடந்தாள். விடுதிக்கு வெளியே முத்துக்களினாலும் வைரங்களினாலும் அலங்கரிக்கப்பட்ட பல்லக்கு தயாராகக் காத்துக் கொண்டிருந்தது. வெளியே தொங்கிக் கொண்டிருந்த திரையை விலக்கிவிட்டு உள்ளே சென்று அமர்ந்தாள். அவள் கண்களில் கண்ணீர்த் துளிகள் உதிர்வதற்கு முன்பு, சட்டென்று திரை மூடிக் கொண்டு அவளை மறைத்து விட்டது.

## 2

சுல்தான் உஜாலா தங்கியிருந்த அந்தப்புரத்துக்கு வந்தான். கண்ணீரைத் துடைத்துக் கொண்டு எழுந்து நின்றாள் உஜாலா. சுல்தான் ஒய்யாரமாக நடந்து வந்து எதிரிலிருந்த பீடத்தில் அமர்ந்தான். தந்தப் பீடத்தில் இருந்த திராக்ஷை ரஸம் நிறைந்த கோப்பையைக் கையில் எடுத்து உஜாலாவிடம்



கொடுத்து, "நீ ஒரு தெய்வப் பிறவி, உஜாலா! உன்னைப் பட்ட மகிஷியாக அடைந்தது குறித்து நான் பெருமைப் படுகிறேன். என்னுடைய அன்பின் ஆழம் உனக்குத் தெரியாது!" என்றான் அரசன்.

உஜாலா பதில் ஒன்றும் சொல்லாமல் அதைக் கையில் வாங்கிக் கொண்டாள்.

சந்திரனின் குளுமையான கிரணங்கள் சுல்தானின் முகத்திலும் வீசியது. அவன் எழுந்து பலகணியின் அருகில் சென்று வானத்தை நோக்கினான். இன்பத்தில் மூழ்கிப் பெருமூச்சு விட்டுக் கண்களை மூடினான்.

இந்தச் சந்தர்ப்பத்தை வெகு ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் உஜாலா. இவ்வளவு நேரம் மறைத்து வைத்திருந்த விஷத்தைத் திராக்ஷை ரஸத்தில் கலந்து குடித்துவிட்டாள். திரும்பினான் சுல்தான்: உஜாலா கீழே விழுந்து கிடந்தாள்!

"நான் பாவி! உஜாலாவைக் கொலை செய்து விட்டேன். திராக்ஷை ரஸத்தில் விஷம் கலந்திருப்பதை அறியாமல் அவளுக்குக் கொடுத்து விட்டேன்!" என்று பொருமினான் சுல்தான்.

அதற்குள் மந்திரி யாகுப்பும் பணியாட்களும் அங்கு வந்து நின்றனர். "யாகுப்! உஜாலாவின் உடலைத் தங்கப் பெட்டியினுள் வைத்து அழகாக அலங்காரம் செய்! என்னுடைய காதலின் சின்னமாக ஓர் அழகான மண்டபம் கட்டி அதில் இந்த 'ஜனஸா'வை வைக்க வேண்டும்" என்றான்.

கண்ணைக் கவரும்படியான அழகிய பளிங்கு மண்டபத்தைக் கட்ட ஷிராஸ் தான் தகுதியானவன் என்பது யாகுப்புக்குத் தெரியும். அவனைத் தேடிச் சென்று விஷயத்தைத் தெரிவித்தான் யாகுப்.

"உசேனின் மகள் உஜாலா தற்கொலை செய்துகொண்டு இறந்துவிட்டாள்!" என்ற செய்தியைக் கேட்டதும், ஷிராஸ் திடுக்கிட்டான். அவனுக்கு உலகமே சுழல்வது போலிருந்தது. அவன் தன் கையில் வைத்திருந்த கத்தியினால் தன்னை மாய்த்துக்கொள்ளத் துணிந்தபோது, சட்டென்று அவன் கரத்தைப் பிடித்துக் கொண்டான் யாகுப்.

"ஷிராஸ்! என்ன காரியம் செய்யத் துணிந்தாய்? நீ ஒரு சிறந்த கலைஞன் என்பது உலகத்திற்குத் தெரிய வேண்டாமா?—எழுந்திரு! உஜாலாவின் ஜனஸாவுக்கு ஓர் அழகான பளிங்கு மண்டபம் கட்டவேண்டும்" என்றான் யாகுப்.

முதலில் சற்று யோசித்தான் ஷிராஸ் "நான் இறப்பதற்கு முன் உலகமே அதிசயிக்கும்படியான ஓர் உயர்ந்த சின்னத்தை எழுப்பி உஜாலாவைக் கௌரவிக்க வேண்டும். அப்போதாவது என் இருதயப் புண் ஆறுதா?" என்று எண்ணினான்.

பிறகு மனதைத் திடப்படுத்திக் கொண்டு யாகுப்புடன் கிளம்பினான் ஷிராஸ்.

ஞாபகச் சின்னத்தின் முழுப் பொறுப்பையும் தானே ஏற்றுக் கொண்டான் ஷிராஸ். இரண்டு வருட உழைப்பின் பயனாக அற்புதமான மண்டபம் எழுந்தது. அந்த மண்டபத்தின் மத்தியில் உஜாலாவின் ஜனஸா இடம் பெற்றது.

## 3

மண்டப வேலை முடிந்ததும் அரசனின் முன்னால் அடிபணிந்து நின்றான் ஷிராஸ்.

சுல்தான் உற்சாக மிகுதியினால் அவன் முதுகைத் தட்டி விட்டு அவனுடன் கிளம்பினான்.

பளிங்கு மண்டபத்தின் அழகைக் கண்டு அதிசயித்து நின்றான் சுல்தான். ஷிராஸை எப்படிப் புகழ்வதென்றே அவனுக்குத் தெரியவில்லை!

ஒரே எக்களிப்போடு மேலே நடந்தான் சுல்தான். மண்டப மத்தியில் அலங்கரிக்கப்பட்ட ஜனஸா வைக்கப்பட்டிருந்தது. பிரம்மாண்டமான தூண்களுக்கு மத்தியில் சிறியதாக இருந்த அந்தப் பிரேதப் பெட்டியை ஒரு விநாடி பார்த்தான். அடுத்த விநாடி அவன் புருவத்தைச் சுளித்துக் கொண்டு, "ஷிராஸ்! இந்தப் பளிங்கு மண்டபத்திற்கு ஜனஸா கொஞ்சமும் பொருத்தமாக இல்லை! இதை உடனே அப்புறப் படுத்திவிடு!" என்றான்.

"என்ன!"

"இந்த மண்டபத்தின் அழகை இந்தப் பிரேதப் பெட்டி கெடுத்து விடுகிறது!"

"பாதுஷா! இந்த ஜனஸாவிற்காக அல்லவா இவ்வளவு பெரிய மண்டபத்தை எழுப்பினேன்......?"

"ஷிராஸ்! நான் சொல்கிறபடி நீ செய்! இறந்துபோன உஜாலாவைவிட இந்தப் பளிங்கு மண்டபத்தின் அழகு தான் உயர்வானது. உடனே இதைக் கொண்டு போய் ஸ்மஸானத்தில் புதைத்து விடு!" என்று கட்டளையிட்டான் சுல்தான்.

ஷிராஸ் கண் கலங்கி நின்றான்!



# சிக்கல் மயமான உலகில் உண்மை வாய்ந்தவை எளிதான விஷயங்களே

ஒரு சிறு வில்லை உங்களுக்கு ஆரோக்கியம் அளிக்கமுடியும்

அது இயற்கைக்கு மாறாக அன்றி அதனுடன் ஒத்துவேலை செய்கிறது

ஆஸ்ப்ரோவால் இருதயத்துக்கு ஒரு கெடுதியுமில்லை

# 'ஆஸ்ப்ரோ'

வலியையும் ஜுரத்தையும் போக்கடிக்கிறது

ஆடவர், ஸ்திரீகள், குழந்தைகள் அனைவருக்கும் ஆஸ்ப்ரோ செய்யக்கூடியதென்ன












எங்கும் கிடைக்கும்




# கம்பர் தரும் காட்சி

• • •

## 200. யாருடைய பாணம்?

**வா**லி விட்டை விட்டு அப்படியே முற்றத்துக்கு வந்தான். அங்கிருந்து சுக்ரீவன் நின்ற போர்க்களத்துக்கு வந்து சேர்ந்தான். சுக்ரீவனும் எதிர்த்து வந்தான். இருவரும் கை கலந்து போர் செய்தார்கள். வெகு நேரம் போராடினார்கள். என்றும் இல்லாத சக்தியோடும் வீரத்தோடும் சுக்ரீவன் போர் செய்தான். ஆனாலும் கடைசியில் வலியற்றவனாய் வாலியின் கையால் நொறுக்குண்டு உயிர் துறக்கும் தறுவாயில் இருந்தான்.

அந்தச் சமயத்தில் எட்டியிருந்த புதரிலிருந்து ஒரு பாணம் வேகமாய் வந்து வாலியின் மார்புக்குள் பாய்ந்தது.

பாணம் வந்து பாயவும் சுக்ரீவன் விலகி விட்டான். வாலி அப்படியே நின்றான். மலைபோல் நின்ற மார்பிலிருந்து இரத்தம் அருவிபோல் நிலத்தில் விழுந்தது. இரத்தம் மிகுதியாய்த் தரையில் சொட்டிய காரணத்தால் சப்தம்கூடக் கேட்டது. இந்த இரத்தப் பெருக்கைப் பார்த்தான் சுக்ரீவன்.

வாசத் தாரவன்
மார்பெனும் மலைவழங்(கு)
அருவி
ஓசைச் சோரியை
நோக்கினன்; உடன்பிறப்(பு)
என்னும்
பாசத் தால்பிணிப்(பு)
உண்டஅத் தம்பியும்
பகங் கண்
நேசத் தாரைகள்
சோரிதர நெடுநிலம்
சேர்ந் தான்.

[வாசத் தாரவன்: வாசனை பொருந்திய மலர்மாலையைக் கழுத்தில் அணிந்திருந்த வாலியின்; ஓசைச் சோரியை நோக்கினன்: சப்தத்தோடு விழுந்த இரத்தப் பெருக்கைப் பார்த்தானோ இல்லையோ; தம்பியும்: சுக்ரீவனும்; பகங்கண் நேசத் தாரைகள் சோரிதர: கலங்கிய கண்களிலிருந்து அன்புருவமாய்ப் பெருகிய கண்ணீர்த் துளிகள் பொழிய; நெடு நிலம் சேர்ந்தான்: மூர்ச்சித்து அப்படியே நிலத்தில் விழுந்தான் சுக்ரீவன்.]

• • •

**வா**லி மகா வீரன். பக்தியுள்ளவன், நேர்மையுள்ளவன். பகைவர்களைத் தாக்குவதற்காக வெகு தூரம் போய்விட்டான். பல மாசங்களாகத் திரும்பி வரவில்லை. பகைவர்களுடைய வாளுக்கே இரையாகி விட்டான் என்பதாக நாட்டிலுள்ளவர்கள் எண்ணினார்கள்.

சுக்ரீவன் தமையனிடத்தில் உண்மையான பற்றுதல் உடையவன். தமையன் இறந்தது பற்றி வருந்தினான். நாட்டுப் பிரமுகர்கள் கேட்டுக் கொண்டதின் மூலம் சிம்மாசனம் ஏறினான். திறம்பட ராஜ்ய காரியங்களை நிர்வகித்தான். பகைவர், நாட்டுக்குள் பிரவேசிக்காதபடி பாதுகாப்பைத் திருத்தமாய்ச் செய்துவைத்திருந்தான். யாரும் நாட்டுக்குள் பிரவேசிக்க முடியவில்லை. தன் அனுமதியில்லாமல் யாரும் உள்ளே வராதபடி ஆங்காங்கு காவல் படைகளை அமைத்திருந்தான்.

இந்த நிலையில் சில வருஷங்கள் கழித்து வாலி திரும்பி வந்தான். காவற் படைகள் புதிதாய் அமைத்திருந்த காரணத்தால் வாலியை இனம் தெரியாது தடுத்துவிட்டார்கள்.

வாலிக்குக் கோபம் வராமல் என்ன செய்யும்? தன்னுடைய சைன்னிய பலத்தோடு காவற் படையை நிராகரித்து விட்டு ஊருக்குள்ப் பிரவேசித்தான். தம்பி சுக்ரீவன் மேல் ஆங்காரம் பிறந்துவிட்டது. அவனை இதோ கொன்று விடுகிறேன் என்று புறப்பட்டான். வேண்டியவர்களாய் உள்ளவர்கள் எவ்வளவு சொல்லியும் கேட்கவில்லை.

சுக்ரீவனது வீடு, மனைவி எல்லாவற்றையும் கைப்பற்றிக்கொண்டான். உயிர் தப்பிப் பிழைப்பதற்காகச் சுக்ரீவன் தூரமான இடத்திற்ப் போய் இருந்து கொண்டான்.

ஊரிலுள்ள பெரியவர்களுக்கு ஒன்றும் செய்ய முடியவில்லை. வாலியிடம் போய்ச் சமாதான வார்த்தை பேசுவதே ஆபத்தாய்ப் போய் விட்டது. தங்களையே துரோகிகள் என்று அவன் எண்ணும்படியாய் இருந்தது. எல்லாம் விதி வசம் என்று இருந்து விட்டார்கள்.

ஆனால் குடும்பத்தோடு ஒட்டியவர்களாய், குடும்ப க்ஷேமத்தில் கண்ணும் கருத்துமாய் இருந்த ஒருவர் இருவர், ஆதரவற்ற சுக்ரீவனுக்குத் துணையாய்ப் போய் நின்றார்கள். அப்படிப் போன புண்ணிய ஆத்மாக்களில் அனுமன் ஒருவன்.

* * *

இந்த விருத்தாந்தத்தையெல்லாம் யோசனை பண்ணிப் பார்த்தோமானால் குற்றஞ் சொல்லுவதற்கு ஆளே இல்லை. சுக்ரீவன் மேலும் குற்றமில்லை; வாலியின் மேலும் குற்றமில்லை. எல்லாம் விதி செய்த காரியம் என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது. விதியின் விளையாட்டுத்தான்!

பூர்வமாய், அன்யோன்யமாய் நேசித்து வந்த அன்பு அப்படி எளிதில் போய்விடவா செய்யும்? கொடுமைக் குன்றும், கஷ்டத்துக் குன்றும் ஊடுருவி வந்த சகோதர வாஞ்சையானது வாலியின் மார்பிலிருந்து இரத்தம் பெருகக் கண்ட மாத்திரத்தில் தம்பியின் உள்ளத்தைத் தாக்கிவிட்டது. மூர்ச்சை அடைந்து நிலத்தில் விழுந்தான். இனி, வாலியைப் பார்ப்போம்:

இரத்தம் சிந்திய காரணத்தால் சோர்வு ஏற்பட்டு நிலத்தில் விழுந்து விட்டான் வாலி. அப்படி விழுந்த வாலிக்கு, வேதனை காரணமாக ஆங்கார வெறி உண்டாய்விட்டது. அப்படியே அம்பை மார்பிலிருந்து பறித்தான். அம்பானது மிக்க வலிமை கொண்டதாய் இருந்தது. இந்த அம்பை முறித்து விடுகிறேன் என்று அந்த வெறியில் எழுந்தான். 'மேரு மலையை இரண்டாய் முறிக்க வேண்டுமென்று எண்ணினால், அது முறியாமல் என்ன செய்யும்' என்று குமுறிக் கொண்டு, 'அம்பில் யாருடைய பெயர் பொறித்திருக்கிறது பார்ப்போம்' என்று பார்க்க ஆரம்பித்தான்.

பறித்த வாளியைப்
பருஉ வலித் தடக்கையால் பற்றி
இறுப்பென் என்றுகொண் (டு)
எழுந்தனன்; 'மேருவை இரண்டாய்
முறிப்பென் என்னினும்
முறிவதன் றோ'என மொழியாப்,
பொறித்த நாமத்தை
அறிகுவான் நோக்கினன் புகழோன்.

[பறித்த வாளியை: மார்பிலிருந்து வெளியே உருவிய உறுதியான அம்பை; பருஉ வலித் தடக்கையால் பற்றி: பருத்த வலிய இரண்டு கைகளால் பற்றிக் கொண்டு; இறுப்பென் என்று கொண்டு எழுந்தனன்: இதோ முறித்து விடுகிறேன் என்று எழுந்து உட்கார்ந்தான்; மொழியா: சொல்லி; பொறித்த நாமத்தை: எழுதியுள்ள பெயரை; அறிகுவான் நோக்கினன் புகழோன்: அறிந்து கொள்வதற்காக உற்றுப் பார்த்தான் வாலி.]

தர்மமும் வீரமும் ஒன்றாய் வாலியின் உள்ளத்தில் தங்கியிருந்தன. திடீர் என்று பாணம் வந்து தைக்கவும் ஆங்காரம் பிறக்கிறது. அதன் வேகத்தை அற்புதமாய்க் காட்டியிருக்கிறது செய்யுளில்.

# விளம்பர வாழ்க்கை

ரு. ராஜாராம்

இது ஒரு விளம்பர யுகம். வியாபாரிகள், சினிமாக் கம்பெனிக்காரர்கள் முதலியவர்களது விளம்பரங்களைத் தவிர, தனி மனிதர்கள் தங்களைப் பற்றியும், தங்களது தேவைகளைப் பற்றியும் விளம்பரம் செய்கிறார்கள். ஒருவர் எப்போது பிறந்தார், அவரது வாழ்க்கையில் நடந்த முக்கிய நிகழ்ச்சிகள் என்னென்ன, எப்போது விவாகம் செய்து கொண்டார், என்ன உத்தியோகத்தில் இருந்தார், அவருக்குக் குழந்தைகள் எத்தனை என்னும் இத்யாதி விவரங்களை அவரது பெற்றோரும், அவரும் செய்யும் விளம்பரங்களைக் கொண்டே அறிந்து கொள்ளலாம்.

ஸ்ரீமான் பாலசுந்தரத்தை நீங்கள் அறிந்திருக்க முடியாது; நானும் பார்த்ததில்லை. ஆனால் அவரது வாழ்க்கையைப் பற்றி நீங்கள் அறிந்து கொள்ள வேண்டுமென்று விரும்பினால் கீழேயுள்ள விளம்பரங்களைப் படித்துப் பாருங்கள்: அவருடைய சரிதமே தெரிந்து விடும்.

## பிறப்பு

1920-ம் ஆண்டு ஜனவரி மாதம் 22-ந் தேதி காலை எட்டு மணிக்கு என் மனைவி ஸ்ரீமதி நாகரத்தினம்மாள், கோஷா ஆஸ்பத்திரியில் ஓர் ஆண் மகவு ஈன்றாள்.

மாசிலாமணி முதலியார்,
புரசைவாக்கம், சென்னை.

## கர்ணபூஷணம்

நிகழும் தை மாதம் 8-ந் தேதி (23-1-21) பகல் 12 மணிக்கு மேல் 1 மணிக்குள்ளாகக் கும்ப லக்கினத்தில் எனது செல்வப் புதல்வன் சிரஞ்சீவி பாலசுந்தரத்திற்கு, எனது இல்லத்தில் கர்ண பூஷணம் நடக்கிறபடியால், தாங்கள் தவறாது வந்திருந்து ஆசிர்வதிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். இதையே அழைப்பிதழாகப் பாவிக்குமாறு நண்பர்களையும் மற்றவர்களையும் கேட்டுக்கொள்கிறேன்.

மாசிலாமணி முதலியார்,
நகரசபை கவுன்ஸிலர்.



## புரசையில் கர்ணபூஷணம்

சென்ற 23-1-21-ல் சென்னை நகரசபைக் கவுன்ஸிலரும், அழகு வழிந்த விநாயகர் கோவில் தர்மகர்த்தாவுமான ஸ்ரீமான் மாசிலாமணி முதலியாரது செல்வப் புதல்வன் சிரஞ்சீவி பாலசுந்தரத்திற்குக் கர்ணபூஷணம் விமரிசையாக நடைபெற்றது. நகரிலுள்ள பல பிரமுகர்கள் வந்திருந்து, குழந்தைக்குப் பரிசுகள் வழங்கினார்கள். ஸ்ரீமதி தங்க குமாரியின் இன்னிசைக் கச்சேரியும் நடைபெற்றது.

## நன்றி

சென்ற 23-1-21-ல் எனது செல்வப் புதல்வன் சிரஞ்சீவி பாலசுந்தரத்தின் கர்ணபூஷண விழாவிற்கு வந்திருந்து, பரிசுகள் வழங்கிச் சிறப்பித்த அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஒவ்வொருவருக்கும் தனித் தனியாக நன்றி தெரிவித்துக் கொள்ள முடியாமைக்கு வருந்துகிறேன்.

மாசிலாமணி முதலியார்,
நகரசபை கவுன்ஸிலர்,
சென்னை.

## தேவை

பள்ளிக்குச் சென்று கொண்டிருக்கும் எனது ஆறு வயதுப் பையனுக்கு 'ட்யூஷன்' சொல்லிக் கொடுக்கவும், கவனித்துக் கொள்ளவும் ஒரு உபாத்தியாயர் தேவை. முன் அனுபவமுள்ளவரா

விருத்தல் வேண்டும். கீழ்க்கண்ட விலாசத்திற்கு மனுச் செய்து கொள்க.

மாசிலாமணி முதலியார்,
புரசை, சென்னை.

## காணோம்

எனது புதல்வன் பாலசுந்தரம் (13 வயது) நேற்று மாலையிலிருந்து காணவில்லை. சாயந்திரம் 'புட்-பால்' ஆடிவிட்டு வீட்டுக்கு வந்தவனை அப்புறம் காணவில்லை. மாநிறம்; உயரம் 4 அடி, 6 அங்குலம்; சிறிது சுருட்டையான கிராப்புத் தலை; அரைக் கைச் சட்டையும், ட்ரவுசரும் அணிந்திருப்பான். கீழ்க்கண்ட விலாசத்திற்கு அவன் இருக்குமிடம் தெரிவித்தாலும், அல்லது கொண்டு வந்து சேர்ப்பித்தாலும் சன்மானம் அளிக்கப்படும்.

மாசிலாமணி முதலியார்,
புரசைவாக்கம், சென்னை.

## விளம்பரம்

பாலசுந்தரம், நீ மூன்றும் பாரத்தில் 'பெயிலா'ப் போனது குறித்து வருத்தப்பட வேண்டாம். நாங்கள் ஒன்றும் அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. ஆனால் நீ இல்லாதது எங்களுக்குப் பெருங் கவலையாக இருக்கிறது. உன்னை ஒன்றும் செய்யவில்லை. வீட்டுக்கு வந்துவிடு. அம்மாள் அழுத வண்ணமே இருக்கிறாள்.

மாசிலாமணி முதலியார்.

## அமெரிக்கா செல்லுகிறார்

பாலசுந்தரம் பி. ஏ.—ராஜதானியில் கெமிஸ்ட்ரியில் முதலாவதாகத் தேறிய இவர், வருகிற ஆகஸ்டு மாதம் மேல் படிப்புக்காக விமான மூலம் அமெரிக்கா போகிறார். அங்கு 'யூனிவர்ஸிடி ஆப் நையகாரா'வில் சேர்ந்து படிப்பார்.



## இந்தியா திரும்பிவிட்டார்

பாலசுந்தர் பி. ஏ., எக்ஸ். ஒய். வி. (நையகாரா); எப்.க்யூ.இஸட். (டிம்பக்டு); இரண்டு வருஷ காலம் அமெரிக்காவில் ரஸாயனக் கல்வி கற்றுவிட்டு, சென்றவாரம் எஸ். எஸ். ஜெயூக் மிங்கி விஜிக் கப்பலில் இந்தியா வந்து சேர்ந்தார். நாம் அமெரிக்காவில் கற்றவற்றைத் தாய்நாட்டுக்குப் பயன்படுத்த வேண்டுமென்று விரும்புகிறார். அவரது உழைப்பை இந்தியா உபயோகித்துக் கொள்ளும் என நம்புகிறார்.

## வேலை தேவை

கெமிஸ்ட்ரியில் நல்ல படிப்பாளியும், இரண்டு வருஷ காலம் அமெரிக்க சர்வகலாசாலைகளில் ரஸாயனம் கற்று எக்ஸ். ஒய். வி.; எப். கியூ. இஸட். பட்டங்கள் பெற்றவருமான ஓர் இளைஞருக்குத் தகுந்த உத்தியோகம் தேவை. ஆங்கிலம், தமிழ் இரு பாஷைகள் தெரியும். கொடுக்கக் கூடிய குறைந்த சம்பளம், மற்ற விவரங்களுடன் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதி அனுப்பவும்.

பாக்ஸ் நெ. 899,
c/o 'தினக் காகிதம்' சென்னை.

## மணப்பெண் தேவை

நல்ல அழகும், சங்கீத ஞானமும் உள்ள இருபது வயதிற்குட்பட்ட ஒரு கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்த முதலியார்ப் பெண் தேவை. மணமகன் வெளிநாடுகள் சென்று வந்தவர். முற்போக்கான கருத்துக்கள் உடையவர். வயது 25. ரஸாயனத் தொழிற்சாலை ஒன்றில் அறுநூறு ரூபாய் சம்பளத்தில் இருக்கிறார். இதைத் தவிர ரொக்கமாகவும், மற்ற விதமாகவும் ரூ. 80,000 பெறுமான ஆஸ்தி இருக்கிறது. விளம்பரம் செய்தது சௌகர்யத்துக்காக. கடிதப் போக்குவரத்து ரகசியமாக வைக்கப்படும். ஜாதகத்துடன் கீழேயுள்ள விலாசத்திற்கு எழுதவும்,

பாக்ஸ் நெ. எக்ஸ். 5766,
C/o 'தினக் காகிதம்.'

## திருமண அழைப்பிதழ்

சிரஞ்சீவி பாலசுந்தர் பி. ஏ. எக்ஸ். ஓய். வி. (நயகாரா) எப். க்யூ. இஸட். (டிம்பக்டு)விற்கும், சௌபாக்கியவதி சரோஜா தேவி (ஸ்ரீமான் எஸ். கல்யாண ராம முதலியார், ரிடயர்ட் சர்க்கிள்-இன்ஸ்பெக்டர் அவர்களின் புதல்வி)க்கும் 29-5-45 தேதியன்று நடக்க விருக்கும் திருமணத்திற்குத் தவறாது விஜயம் செய்வீர்களாக.

## சென்னையில் பிரபல திருமணம்

சென்ற மே மாதம் 29-ந் தேதியன்று நகரசபைக் கவுன்ஸிலரா யிருந்தவரும், அழுது வழிந்த விநாயகர் கோவில் டிரஸ்டியாக இருந்தவருமான லேட் மாசிலாமணி முதலியாரின் புதல்வன் சிரஞ்சீவி பாலசுந்தருக்கும், ரிடயர்ட் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் கல்யாணராம முதலியாரின் புத்திரி சௌ. சரோஜா தேவிக்கும் சென்னையில் மிக விமரிசையாய்த் திருமணம் நடைபெற்றது. கனம் மந்திரி திருகுதாளம், பம்பாய் மியூச்சுவல் சொஸைட்டி சேர்மன் பிஸ்தாபங்களே, போலீஸ் இலாகாவைச் சேர்ந்த ஆர். எஸ். சங்கோஜராவ், ஸ்ரீமான் புனர்பூச சாஸ்திரி முதலியவர்களும், இன்னும் மற்றப் பிரமுகர்களும் விஜயம் செய்தனர். அநேக ஆசீர்வாதச் செய்திகளும், பரிசுகளும் வந்து குவிந்தன. தம்பதிகள் நெடுங்காலம் வாழவேண்டுமென்று வாழ்த்துச் செய்திகள் படிக்கப்பட்டன. ஸ்ரீமான் வெங்கிடாபட்டி விஸ்வநாத அய்யரின் சங்கீதக் கச்சேரியும் குமாரி மதனாவின் நடனமும் நடைபெற்றன.

## நன்றி அறிவிப்பு

ஸ்ரீமான் அண்டு ஸ்ரீமதி பாலசுந்தர் தங்களது விவாகத்தின்போது விஜயம் செய்தவர்களுக்கும், வாழ்த்துச் செய்தி அனுப்பியவர்களுக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறார்கள். தனித்தனியாக தெரிவிக்க முடியாமைக்கு வருத்தம் தெரிவித்துக் கொள்கிறார்கள்.

## வீடு தேவை

புரசைவாக்கத்திலோ அல்லது மாம்பலத்திலோ ஒரு சிறு பங்களா அல்லது



வீடு தேவை. தம்பதிகள் இருவர் மாத்திரம். மாதம் ரூ. 90 வரை வாடகை தரமுடியும்.

பாலசுந்தர்,
பரமேஸ்வரி போர்டிங் அண்டு லாட்ஜிங், சென்னை.

## குழந்தை பிறந்தது

என் மனைவி சரோஜாதேவி — நேற்று மாலை 7-மணிக்குப் பரமாத்மா நர்ஸின் ஹோமில் ஒரு பெண் குழந்தை ஈன்றாள்.

பாலசுந்தர்.

## காலஞ் சென்றார்

அக்வா ரெஜியா இண்டஸ்ட்ரீஸ் சூப்பர்வைசரான ஸ்ரீ பாலசுந்தர் பி. ஏ. எக்ஸ். ஓய். வி. சென்ற வாரம் திடீரென்று மாரடைப்பினால் இறந்தார். அவர் தயாள குணமும், பரந்த நோக்கமும் கொண்டவரா யிருந்தார். அநேக கல்வி ஸ்தாபனங்களுக்கு நன்கொடைகள் வழங்கியுள்ளார். வெளி நாடுகளிலெல்லாம் சென்று ரசாயனக் கல்வி கற்று வந்து, தாய்நாட்டிற்காகச் சேவை செய்தவர். பிரமதேவன் எண்டர்பிரைஸ் போன்ற ஸ்தாபனங்கள் உண்டாவதற்குக் காரணஸ்தரா யிருந்தார். தம்முடைய மனைவியையும், ஒரே புதல்வனையும் விட்டுவிட்டு, விண்ணுலகெய்தினர்.

## ஞாபகார்த்தமாக

பாலசுந்தர்! சென்ற வருடம் இச்சமயம் இறந்த உங்களது ஞாபகம் எங்கள் நெஞ்சில் என்றும் இருக்கிறது.

பால சுந்தரை நினையா நாள்
பாழ் நாளா கும்மே!

சரோஜாதேவி (மனைவி)
ரத்னகுமார் (புதல்வன்)

# சந்திர ஹாரம்

ஆசிரியர்: பிரேம்சந்த்
மொழிபெயர்ப்பு: ரா. வீழிநாதன்

## முப்பத்தொன்பதாம் அத்தியாயம்
## பத்மாவின் வெற்றி

'பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ?' என்ற கவிஞனின் வாக்கு எவ்வளவு தூரம் உண்மையானது என்பதை நாம் அறியோம். ஆனால் அவர்களுடைய பொழுது மலைப் பொழுதாக இருந்தாலும் கணப் பொழுதாகக் கழிந்து விடுகிறது என்பது மட்டும் யாரும் மறுக்க முடியாத உண்மை. ஆறுமாத காலமாகப் பிரிந்து வாழ்ந்து வந்த ரமாநாத்துக்கும் பத்மாவுக்கும் பேசுவதற்கு எத்தனையோ விஷயங்கள் இருந்தன. அப்படியிருக்கும் பொழுது அவர்களைப் பேசாமல் இரு என்றால், எப்படியிருக்க முடியும்? ரமாநாத் தனது கௌரவத்தை நிலை நாட்டிக் கொள்ளும் பொருட்டுத் தான் பட்ட துன்பங்களை ஒன்றுக்குப் பத்தாகக் கூட்டிப் பத்மாவிடம் சொன்னான். ஆனால் பத்மாவோ தன் பேச்சில் மனதை நோகச் செய்யக்கூடிய சொற்களையே உபயோகிக்கவில்லை. ரமாநாத்தின் மனது துளிக்கூட நோகக் கூடாது என்பதுதான் அவளுடைய விருப்பம். ஆனால் ரமாநாத்துக்கோ அவளை மேலும் மேலும் அழ வைப்பதில் அலாதி ஆனந்தம்! ஆகவே, அவன்தான் வீட்டிலிருந்து ஓடிய கதையைக் கல்லும் கரைந்து உருகும்படி உருக்கமாகச் சொல்லி அவளை அழ வைத்து வேடிக்கை பார்த்தான். பத்மா தன் பேச்சில் மயங்கிவிட வேண்டும் என்பது அவனுடைய அவா. ஏனெனில், இதுவரை அவனுக்கு எதிலுமே தோல்விதான் கிட்டி வந்தது. அவன் எவைகளையெல்லாம் மூளைக்கு எட்டாத சிக்கலான பிரச்னைகள் என்று எண்ணினானோ, அவைகளையெல்லாம் பத்மா ஒரு நொடிப் பொழுதில் ஒன்றுமில்லாதவை என்று நிரூபித்துக் காட்டி விட்டாள். சதுரங்கப் போட்டியில் தனக்குக் கிட்டிய வெற்றியைப் பற்றி வானளாவப் புகழ வேண்டும்; பத்மா தன்னுடைய மேதையைக் கண்டு அதிசயிக்க வேண்டும் என்பது அவனுடைய அந்தரங்க ஆவல். ஆனால் பத்மா அதிலும் தன்னுடைய வெற்றியையே நிலை நாட்டினாள். எதிலுமே தனக்கு இம்மாதிரித் தோல்விக்கு மேல் தோல்வி கிட்டுவதைக் கண்டதும் அவனுக்குத் தான் பட்ட கடுகத்தனை கஷ்டங்களையெல்லாம் மலையாக்கிச் சொல்லி, அவளுடைய உள்ளத்தில் இடம் பெறுவதைத் தவிர வேறுவழி தோன்றவில்லை. ஆகவேதான் அவன் அந்த முறையைக் கையாண்டான்.

பத்மா அவனுடைய துயரம் நிரம்பிய கதையைக் கேட்டு விசித்து விசித்து அழுதுகொண்டே, "நீங்கள் இவ்வளவு கஷ்ட நிஷ்டூரங்களுக்கு ஆளாகியும் எங்களுக்கு ஒரு வரிகூட எழுதாமல்தானே இருந்தீர்கள்! ஆமாம், உங்களுக்கும் எங்களுக்கும் என்ன உறவு வைத்திருக்கிறது? எதற்காக எழுதப் போகிறீர்கள்? கண்டால் கரும்பு; காணாவிட்டால் கருவேப்பிலை என்பார்களே, அப்படி நடந்து கொண்டு

வதுதான் உங்களைப் போன்றவர்களுக்கு அழகு; கெட்டிக்காரத்தனமும் கூட!'' என்றான்.

"இல்லை பத்மா! நீ அப்படி என்னுவது கொஞ்சங்கூட நியாயமில்லை. என் மனம் பட்டபாடு எனக்குத்தான் தெரியும். நானே சொல்லாமல் கொள்ளாமல் ஓடி வந்தவன். அப்படியிருக்கும் பொழுது எந்தத் தைரியத்தைக் கொண்டு, நான் படும் கஷ்டங்களைப் பற்றி உங்களுக்கு எழுதுவது? நீயே சொல்லு. ஆகையால் தான் நிறையப் பணம் சேர்த்துக் கொண்டு கடிதம் எழுதுவது என்று எண்ணி நான் பேசாமல் இருந்தேன். வேறொன்றும் இல்லை!'' என்று ரமாநாத் அன்பு தோய்ந்த குரலில் சொன்னான்.

பத்மாவின் கண்களில் நீர் முட்டியது. "நீங்கள் சொல்லுவது ரொம்பச் சரி. பணம்தானே மனுஷ்யனுக்கு உயிர் நாடி? பணம் இல்லாவிட்டால் யார் யாரை விரும்புகிறான்? நாங்களும் பணத்தையே பிரதானமாகக் கருதும் மனுஷ்ய வர்க்கத்தில் பிறந்தவர்கள்தானே! நீங்கள் திருடத்தான் திருடுவீர்களோ, அல்லது கொள்ளைதான் அடிப்பீர்களோ, இல்லை கள்ள நோட்டுகள்தான் அச்சடிப்பீர்களோ எங்களுக்குத் தெரியாது. பொய்ச் சாட்சியம் சொல்லியோ, பிச்சை வாங்கியோ, எந்த விதத்திலோ நீங்கள் பணம் சம்பாதித்துக் கொண்டு வந்தால்தான் எங்களுக்குத் திருப்தி ஏற்படும். இல்லையா? பேஷ்! எங்களை நீங்கள் ரொம்ப நன்றாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்களே! இல்லாவிட்டால் இப்படிச் சொல்லுவீர்களா?'' என்று ஏளனம் கலந்த குரலில் கேட்டாள்.

ரமாநாத் வெட்கிப்போய், "இல்லை, பத்மா! அதற்காகச் சொல்லவில்லை. இவ்வளவு மோசமான நிலைமையில் உங்கள் முகத்தில் விழிப்பதெப்படி என்று பயந்தேன். அதுவும் முக்கியமாக உன்னிடம் தான் அதிகம் பயந்தேன். நீ என்னை வஞ்சகன், கபடன், பொய்யன், பயந்தாங்கொள்ளி என்றெல்லாம் எண்ணினால் என்ன செய்வது? நிறையப் பணத்துடன் திரும்பிவந்தால் அப்படியெல்லாம் எண்ண மாட்டாயோ என்ற சபலம். அதனால் தான்...'' என்று இழுத்தான்.

"நான் அந்தப் பணத்தைக் கையினால் கூடத் தொடமாட்டேன். நீங்கள் என்னை எவ்வளவு மட்டமானவளாக, எவ்வளவு சுயநலக்காரியாக, எவ்வளவு பேராசை பிடித்தவளாக எண்ணியிருக்கிறீர்கள் என்பது இன்றுதான் தெரியவந்தது. அதற்காக உங்களைக் குற்றம் கூறிப் பயன் இல்லை; குற்றம் முழுவதும் என்னுடையதுதான். நான் மட்டும் நல்லவளாக இருந்தால், இந்தக் கதி நமக்கு ஏன் வருகிறது? —முப்பது நாற்பது ரூபாய் மாதச் சம்பளம் வாங்கும் ஒரு புருஷனுடைய மனைவி, நாளைக்கு நான்கைந்து ரூபாய் ஊதாரிச் செலவு செய்தால், ஆயிரம் இரண்டாயிரத்துக்கு நகைகள் செய்து போட்டுக்கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டால் குடும்பம் எப்படி உருப்படும்! நீங்கள் என்னைப் பணத்தில் ஆசை கொண்டவளாக எண்ணியதில் துளிக்கூடத் தப்பில்லை. ஆனால் 'நெருப்பு சுடும்' என்பதை அனுபவபூர்வமாக உணர்ந்திருந்த நான் மறுபடியும் அந்த நெருப்பில் இறங்கத் தயாராயில்லை. நான் முன் செய்த பாவங்களுக்குத்தான் இப்பொழுது பலன் அனுபவித்துக் கொண்டிருக்கிறேனே! இன்னும் எவ்வளவு நாட்கள் இப்படி அனுபவிக்க வேண்டுமோ, தெரியவில்லை. ஆனால் அதற்காக நான், எனக்குச் சுகபோக வாழ்வில் உள்ள ஆசைகள் அடங்கி விட்டன என்றோ, துணிமணிகள், நகைகள் முதலியவைகளிடம் வெறுப்புணர்ச்சி ஏற்பட்டு விட்டதென்றோ, ஸினிமா, டிராமா என்று ஊர் சுற்றும் ஆவல் குறைந்து விட்டது என்றோ சொல்லத் தயாராயில்லை. அந்த ஆசைகள் எல்லாம் உள்ளூறக் குமுறிக் கொண்டுதான் இருக்கின்றன. நீங்கள் நல்லமுறையில் சம்பாதித்து என் ஆவல்களைப் பூர்த்தி செய்ய முன் வந்தால் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி ஏற்படும். ஆனால் கெட்ட வழியில் ஆத்மத் துரோகம் செய்து நீங்கள் லட்சம் லட்சமாகச் சம்பாதித்துக் கொட்டினாலும் நான் கண்ணெடுத்துக் கூடப் பார்க்க மாட்டேன். நீங்கள் போலீஸ் தரப்பில் சாட்சி சொல்லுவதற்குச் சம்மதித்து விட்டீர்கள் என்பதைக் கேட்டதும் எனக்கு ஏற்பட்ட வருத்தத்துக்கு ஓர் அளவில்லை. உடனே நான் தேவீதீன் தாத்தாவை அழைத்துக் கொண்டு உங்களைப் பார்ப்பதற்காக வந்தேன். ஆனால் அன்றுதான் நீங்கள் வெளியே போனீர்கள் என்பது உங்கள் பங்களா வரைக்கும் வந்த பின்தான் தெரியவந்தது. அன்று போனவர் இன்றுதான் திரும்பியிருக்கிறீர்கள். இவ்வளவு ஆட்களைக் கொலை செய்யும் பாவச் சுமையை நீங்கள் ஏற்றுக் கொள்வதை நான் சிறிதும் விரும்பவில்லை. நீங்கள்

நியாயஸ்தலத்தில், 'போலீஸின் மிரட்டலுக்குப் பயந்து நான் அப்படிச் சொன்னேனே தவிர, எனக்கும் இந்த வழக்குக்கும் ஸ்நானப் பிராப்தி கூடக் கிடையாது' என்று பட்டவர்த்தனமாகவும் தைரியமாகவும் சொல்லிவிட வேண்டும்'' என்று பத்மா துயரம் ததும்பிய குரலில் ரமாகாந்தை வேண்டிக் கொண்டாள்.

''உன் கடிதம் கிடைத்தது முதல் நான் இதே யோசனையாகத்தான் இருக்கிறேன். ஆனால் 'என்ன செய்வது ?' என்று புரியவில்லை. ஒரு வார்த்தை சொல்லிவிட்டு மறுபடியும் புரண்டு பேசுவதென்றால் எனக்கு யோசனையா யிருக்கிறது'' என்று கவலை தோய்ந்த குரலில் கூறினான் ரமாகாந்த்.

''எதற்கும் சாட்சியத்தை மாற்றிக் கொண்டு விடுவதுதான் எனக்கு உசிதமாகப் படுகிறது என்றாள் பத்மா.''

'' அதெப்படி முடியும், பத்மா ?''

'' அதில் என்ன சிரமம் என்கிறீர்கள் ? முனிஸிபாலிடிதான் உங்கள் மீது வழக்குத் தொடரப் போவதில்லையே ! அப்புறம் எதற்கு இந்த வீண் பயம் ?''

''பயமொன்றும் இல்லை; ஆனால் மானம் என்று ஒன்று இருக்கிறதே ! அதைக் காப்பாற்ற வேண்டாமா ? சொன்ன சொல்லை மாற்றிக் கொள்வதென்பது என்னால் ஆகாது. அது மட்டும் இல்லை ; இந்த வழக்கு முடிந்ததும் எனக்கு எங்கேயாவது ஒரு நல்ல வேலை தந்து விடுவார்கள். அப்புறம் எவ்விதக் கவலையுமின்றி 'ஹாய்யா'கப் பொழுதைப் போக்கலாம். இனி வேலைக்காகத் தெருத் தெருவாய்ச் சுற்றியலைய என்னால் ஆகாது !'' என்றான் ரமாகாந்த்.

பத்மா அதற்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை. 'மனிதனிடத்தில் 'தன்னலம்' என்பது எவ்வளவு தூரம் அதிகரித்திருக்கிறது ?' என்பதைப் பற்றி அவள் சிந்திக்கலானாள்.

பத்மா வாய் திறவாமல் மௌனம் சாதிப்பதைக் கண்டதும் ரமாகாந்த் மிகவும் மிடுக்கான குரலில், ''மேலும் ஜட்ஜ் என் சாட்சியத்தை மட்டும் நம்பித் தீர்ப்புச் சொல்லிவிடப் போவதில்லையே ! நான் என் சாட்சியத்தை மாற்றிக் கொண்டு விடுகிறேன் என்றே வைத்துக் கொள். எனக்குப் பதிலாக இன்னொரு சாட்சியைக் கொண்டு வந்து நிறுத்தப் போலீஸ்காரர்களுக்கு எவ்வளவு நேரம் பிடிக்கப் போகிறது ? எப்படியும் குற்றவாளிகள் தப்பிவிடப் போவதில்லை. அப்படியிருக்கும்பொழுது நான் என் வாழ்வை வீணாக்கிக் கொள்ளுவானேன்? நீயே சொல்லு !'' என்றான்.

அவன் அப்படிப் பேசியது பத்மாவுக்கு வெறுப்பை அளித்தது. அவள் புருவத்தை நெரித்துக் கொண்டு, ''உங்களுக்கு மானம், வெட்கம், ருசி, சொரணை என்று ஒன்று இருந்துதான் இப்படிப் பேசுகிறீர்களா, அல்லது அவற்றை யெல்லாம் விற்றுவிட்டு இப்படிப் பேசுகிறீர்களா? எனக்குப் புரியவில்லை, அதனால்தான் கேட்கிறேன். தனக்குத் தின்னச் சோறு இல்லையே என்பதற்காகப் பிறர் நெஞ்சைத் திருகுவதா? சீ, என்ன அற்பத்தனம்! என்னால் இதைப் பார்த்துச் சகித்துக் கொண்டிருக்க முடியாது. இதைவிடக் கூலி வேலை செய்து பிழைப்பதோ, அல்லது பட்டினியினால் வாடி மடிவதோ மேல் என்பேன். பிறரைத் துன்புறுத்தித் தான் சொர்க்க போகம் அனுபவிக்க விரும்புவது ரொம்ப ரொம்பத் தப்பு!'' என்றாள்.

பேச்சில் அவளை அதட்டி உருட்டி மடக்கிவிடலாம் என்ற நோக்கத்துடன் ரமாகாந்த், ''அப்படியானால் நான் கூலி வேலை செய்து மடிய வேண்டும் என்பது தான் உன் விருப்பமா?'' என்று கேட்டான்.

''அப்படி நான் எங்கே சொன்னேன் ? பிறரைத் துன்புறுத்தி ஆனந்த வாழ்க்கை வாழ்வதைக் காட்டிலும் கூலி வேலை செய்து பிழைப்பதே மேல் என்றுதானே சொன்னேன் !'' என்றாள் பத்மா.

இதைக் கேட்டதும் ரமாகாந்த் சற்று இறங்கி வந்து சாந்தமான குரலில், ''பத்மா, நீ நினைப்பது போல நான் அவ்வளவு நீசன் அல்ல. கெடுதலான விஷயம் எல்லோருக்குமே கெடுதலாகத் தான் படுகிறது. இத்தனை ஆசாமிகள் என் கைகளினால் மடியப் போகிறார்களே என்று எண்ணும்பொழுது எனக்கும் வருத்தமாகத்தான் இருக்கிறது. ஆனால் வேறு வழியின்றி நான் இதில் சம்பந்தப்படும்படி ஆகிவிட்டது. வாழ்வில் அடிபட்டு இன்னலுறும் சக்தி இனி எனக்கு இல்லை. போலீஸாரிடம் வீண் வம்பை விலைக்கு வாங்கிக் கொள்ளவும் நான் தயாராயில்லை. உலகத்தில் உள்ளவர்கள் அனைவருமே உயர் நோக்கம் கொண்டவர்களாக இருந்துவிட முடியுமா?

என்னிடமோ உயர் நோக்கங்களே கிடையாது. அப்படிப்பட்ட என்னை எதற்காக நீ உயரத் தூக்கிவிட விரும்புகிறாய், பத்மா?'' என்றான்.

பத்மா குரலில் கடுமை தொனிக்க, ''எவனொருவனிடத்தில் கொலை செய்யும் சக்தியிருக்கிறதோ, அவனிடத்தில் கொலை செய்யாமல் இருக்கக்கூடிய சக்தி யில்லை என்று நீங்கள் சொல்லுவது ஆச்சரியமாக அல்லவா இருக்கிறது! ஓடும் ஆற்றல் வாய்ந்தவனால் நிற்க முடியவில்லை என்று சொன்னால் யாராவது நம்புவார்களா? நினைத்த காரியத்தை முடிக்கவில்லையென்றால் அது ஆண்மைக்கு அழகா? ஒரு காரியத்தைச் செய்தே தீருவது என்றால் சக்தி தானாகவே வந்து விடும். நீங்கள் மட்டும் சாட்சியத்தை மாற்றிவிடுவது என்று முடிவு கட்டிவிடுங்கள், போதும். தானாகவே உங்களுக்கு அதற்கு வேண்டிய தைரியமும் சக்தியும் வந்துவிடும்'' என்றாள்.

ரமாகாந்த் தலை குனிந்த வண்ணம் அவளுடைய சொற்களைக் கேட்டுக் கொண்டிருந்தான்.

பத்மா அதே ஆவேசத்துடன், ''மனிதனால் முடியாத காரியம் என்று ஒன்றும் இல்லை. நீங்கள் இந்தப் பாவச் செயலை செய்துதான் தீருவது என்று கங்கணம் கட்டிக் கொண்டிருந்தீர்களானால், இப்பொழுதே என்னை அனுப்பிவிடுங்கள். நான் முகத்தில் கரியை அரைத்துப் பூசிக் கொண்டு இரவுக்கிரவே இங்கிருந்து ஓடி விடுகிறேன்; அப்புறம் உங்கள் பேச்சையே எடுக்கவில்லை. நீங்கள் உங்கள் இஷ்டப்படி ஆனந்தமாக இருங்கள்!'' என்றாள்.

அவளுடைய சொற்கள் ரமாகாந்தின் உள்ளத்தை உறுத்தின. அவன் தலையைச் சொறிந்து கொண்டே, ''இந்தக் கஷ்டத்திலிருந்து எப்படியாவது தப்ப வேண்டும் என்று தான் நானும் விரும்புகிறேன்'' என்று ஆரம்பித்தான்.



“அப்படியானால் யோசனை என்ன? உங்களுக்குச் சொல்ல வெட்கமாயிருந்தால் நானே நேரில் வந்து வேண்டுமானாலும் சொல்லுகிறேன். ஆமாம் அதுதான் நல்லதுகூட. நானே வந்து உங்கள் சூபரின்டெண்டிடம் வந்து சகல விருத்தாந்தங்களையும் சொல்லுகிறேன்!’ என்றாள் பத்மா.

ரமாநாத்தின் தயக்கம் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது. கட்டின பெண்டாட்டியே வந்து தமக்குப் பதிலாக வக்காலத்து வாங்கிப் பேசுவதா? அவ்வளவு தொடை நடுங்கியா, நாம்? நம்மை நாமே இவ்வளவு இழிவு படுத்திக் கொள்ளுவதா?—இதை நினைக்கும்பொழுது அவனுடைய உடல், உள்ளம் எல்லாம் குன்றிவிட்டன. “வேண்டாம் பத்மா, நீ வர வேண்டாம்; நானே சொல்லிக் கொள்ளுகிறேன். எனக்கு இதுகூடத் தெரியாதா?” என்றான் அவன்.

“உண்மையாகச் சொல்லுங்கள். சாட்சியத்தை நீங்கள் நிஜமாகவே மாற்றிக் கொள்ளுகிறீர்களா?” என்று பத்மா அடித்துக் கேட்டாள்.

ரமாநாத் கிணற்றில் விழுந்தவன் பேசுவதுபோல மெதுவான குரலில், “அது தான் சொல்லுகிறேனே! கட்டாயம் மாற்றிக்கொண்டு விடுகிறேன்!” என்றான்.

அதற்குப் பிறகு வேறு விஷயங்களைப் பற்றிப் பேச்சு நடந்தது. ‘ரமாநாத் ஆபீஸ் பணத்தைக் கையாடிய விஷயம் எப்படித் தெரிந்தது? ஆபீஸ் பணத்தை எப்படிக் கட்டினார்கள்? ஊராருக்கு அவன் மோசடி செய்த விஷயம் தெரிந்து விட்டதா? அல்லது காதோடு காது வைத்தாற் போல, அதை அமுக்கி விட்டார்களா? ரத்தன் எப்படி யிருக்கிறாள்? கோபி ஏன் இவ்வளவு சீக்கிரம் ஊருக்குத் திரும்பி விட்டான்? இரண்டு பேரும் ஏதாவது படிக்கிறார்களா, அல்லது ஊர் சுற்றித் திரிகிறார்களா? அம்மாவும் அப்பாவும் திடமா யிருக்கிறார்களா?’ என்பது போன்ற விஷயங்களைப் பற்றி முதலில் சர்ச்சை நடந்தது. அதற்கடுத்தாற் போல, வருங்கால வாழ்க்கையைப் பற்றி மனம் போனவாறு கோட்டைகள் கட்டினார்கள்.

“ஊருக்குப் போய் ரத்தனிடம் கொஞ்ச நிலபுலன்களைக் குத்தகைக்கு எடுத்துக் கொண்டு, பண்ணை வைத்து விடலாம். ஆனந்தமாகக் கிராம வாழ்க்கை வாழலாம்” என்றாள் பத்மா.

ஆனால் ரமாநாத்துக்கு அது பிடிக்கவில்லை. “இல்லை, அதைவிட இந்த ஊரிலேயே ஒரு தேநீர்க் கடை வைத்து நடத்தலாம்” என்றான் அவன்.

இருவருக்கும் இதைப் பற்றிச் சிறிது நேரம் நீண்ட தர்க்கம் நடந்தது. கடைசியில் அதிலும் ரமாநாத்துக்குத் தோல்வி தான் கிட்டியது.

இங்கிருந்தால் அவன் வீட்டைக் கவனித்துக் கொள்ள முடியாது. தம்பிகளைப் படிக்க வைக்க முடியாது. வயது முதிர்ந்த தாய் தந்தையர்களுக்குச் சிசுருஷை செய்ய முடியாது. வீட்டை காக்கும் பொறுப்பு வயதில் மூத்தவனான அவனைத்தான் சாரும் என்றெல்லாம் பத்மா வாதாடி, அவனைப் பேச்சில் மடக்கி விட்டாள்.

ஆகவே, ரமாநாத் பதில் பேச வழியின்றி வாய் அடைத்துப் போனான்.

## நாற்பதாம் அத்தியாயம்

## போலீசார் திகைப்பு

ரமாநாத் விடியற் காலையிலேயே தன் பங்களாவை அடைந்தான். அவன் வெளியே போய் வந்த விவரம் யாருக்குமே தெரியாது.

காலை ஆகாரம் முடிந்ததும் அவன் முதல் வேலையாக அந்தக் கடிதத்தைக் கிழித் தெறிந்தான். பிறகு, நல்ல உடைகளை அணிந்து கொண்டு நேரே டிப் இன்ஸ்பெக்டர் தங்கியிருந்த அறைக்குச் சென்றான். அவனுடைய கண்கள் ஓரேயடியாகச் சிவந்திருந்தன. அதைக் கண்டதும் டிப் இன்ஸ்பெக்டர், “சௌக்கியமா? கண்கள் ஏன் சிவந்திருக்கின்றன? வேலைக்காரர்கள் ஏதாவது சரிவரக் கவனிக்காமல் குறும்புத்தனம் செய்து விட்டார்களோ?” என்று விசாரித்தார்.

ரமாநாத் நின்ற வண்ணமே, “வேலைக்காரர்கள் எவ்விதப் பாவமும் அறியார்கள். குறும்புத்தனம் செய்தவர்கள், நீங்களும் உங்கள் போலீஸ் இலாகாவும்தான்!

நீங்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து என்னை அடிமுட்டாளாக்கி விட்டீர்கள்!'' என்றான்.

ஸப் இன்ஸ்பெக்டர் பதட்ட மடைந்து, "என்ன விஷயம்? சற்றுப் புரியும்படியாகச் சொல்லுங்களேன்!'' என்றார்.

"என்ன விஷயம் என்று கேட்கிறீர்கள்? விஷயம் மிகவும் விசேஷமானது தான். இந்த வழக்கில் உங்கள் மனம்போன போக்குப்படி நான் சாட்சியம் சொல்லத் தயாராகவில்லை. அதுதான் விசேஷம். எனக்கும் உங்கள் வழக்குக்கும் யாதொரு விதமான சம்பந்தமும் கிடையாது. நீங்கள் என்னை ஏமாற்றி வாரண்டு பிறப்பிக்கப்பட்டிருப்பதாகப் பொய் சொல்லிச் சாட்சி சொல்லும்படி நிர்ப்பந்தப் படுத்தினீர்கள் என்பதும், என்மேல் எவ்விதக் குற்றமும் இல்லை என்பதும் எனக்குத் தெரிந்து விட்டது. ஆகையால் நான் ஜட்ஜிடம், 'நீங்கள் என்னைப் பயமுறுத்திச் சாட்சி சொல்ல வைத்ததாகவும், எனக்கும் இந்தக் கேஸுக்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது' என்றும் சொல்லி என்னை விடுவித்துக் கொள்ளப் போகிறேன். நிரபராதிகளைக் கொல்லும் பாவச் சுமையை நான் என் தலையில் ஏற்றுக் கொள்ளத் தயாராயில்லை!'' என்றான் ரமாநாத்.

ஸப் இன்ஸ்பெக்டர் குரலில் கடுமையை வரவழைத்துக் கொண்டு, "நீங்களே பணத்தைக் கையாடியதாக ஒப்புக் கொண்டீர்களே! அதற்கு என்ன அர்த்தம்?'' என்றார்.

"மொத்தம் கூட்டிப் போடுவதில் தப்பு ஏற்பட்டு விட்டது. நான் பணத்தைக் கையாடி மோசடி ஒன்றும் செய்யவில்லை. அப்படிச் செய்திருந்தால் முனிஸிபாலிடி என் மீது வழக்குத் தொடர்ந்திராதா?'' என்று கேட்டான் ரமாநாத்.

"இந்த விவரங்கள் எல்லாம் உங்களுக்கு எப்படித் தெரிந்தது?''

"எனக்கு எப்படித் தெரிந்தால் உங்களுக்கு என்ன? எதற்காக இந்த அனாவசியக் கேள்விகள் எல்லாம் கேட்கிறீர்கள்? நான் சாட்சி சொல்ல முடியாது. போலீசார் என்னை ஏமாற்றிப் பயமுறுத்திச் சாட்சி சொல்ல வைத்தார்கள் என்று பட்டவர்த்தனமாகச் சொல்லிவிடப் போகிறேன். இந்தச் சம்பவம் நடந்த நாட்களில் நான் அலகாபாத்தில் இருந்திருக்கிறேன். அதற்கு அத்தாட்சி வேண்டுமென்றால் அலகாபாத் முனிஸிபல் ஆபீஸில் அட்டென்டென்ஸ் ரிஜிஸ்தரில் என் கையெழுத்தைப் பார்த்துக் கொள்ளலாம்'' என்றான் ரமாநாத்.

அவனுடைய ஆட்சேபனைகளைச் சிரித்துப் பேசி மடக்கி விடலாம் என்ற நோக்கத்துடன் ஸப் இன்ஸ்பெக்டர், "சரி, ஸார்! நீங்கள் சொல்லுவதை உண்மையென்றே வைத்துக் கொள்ளுவோம். நாங்கள் உங்களை ஏமாற்றியதாகவே வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள். ஆனால் நீங்கள் செய்த உபகாரத்துக்குப் பதில் உபகாரம் செய்ய எங்கள் போலீஸ் இலாகா எப்பொழுதுமே காத்திருக்கிறது. இந்த வழக்கில் சாட்சியம் முடிந்ததும், 'உங்களுக்கு ஒரு நல்ல வேலை கிடைத்துவிடும். நீங்கள் ஆனந்தமாக மோட்டாரில் உட்கார்ந்து ஊர் சுற்றுவீர்கள்' என்பதையும் நீங்கள் மறந்துவிடக் கூடாது. அதுவும் ரகசியப் போலீஸ் இலாகாவில் வேலை கிடைத்து விட்டால், உங்களை அப்புறம் யாராலும் கட்டிப் பிடிக்க முடியாது. இப்பொழுதே சர்க்கார் உங்கள்மீது எவ்வளவு நம்பிக்கையும் மரியாதையும் வைத்திருக்கிறது என்பதை நீங்கள் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். இந்தக் காலத்தில் கரணம் போட்டாலும் குமாஸ்தா வேலை கிடைப்பது கூடக் குதிரைக் கொம்பாயிருக்கிறது. போலீஸ் இலாகாவில் உத்தியோகம் பார்த்தால் உங்களுக்குப் பிரமோஷனுக்கு மேல் பிரமோஷன் கிடைக்கும். சாமர்த்தியமுள்ள பிள்ளையாக இருந்தால் 'ராய் பகதூர் முன்ஷீ ரமாநாத், டிபுடி ஸுபரின்டென்டு' என்றுகூட நீங்கள் பட்டம் பெற்று விடலாம். நாங்கள் செய்திருக்கும் இந்த ஒத்தாசைக்காக நீங்கள் எங்களுக்கு நன்றியல்லவா செலுத்தியிருக்க வேண்டும்! ஆனால் நீங்கள் அதற்குப் பதிலாக எங்களைக் கோபித்துக் கொள்ளுகிறீர்களே! இது நியாயமா? நீங்களே யோசித்துப் பாருங்கள்!'' என்றார்.

ரமாநாத்தின் மனதை மாற்றும் திறன் அந்த ஆசை வார்த்தைகளிடத்தில் இல்லை. "குமாஸ்தா வேலை செய்தோ, கூலி வேலை செய்தோ நான் வயிறு கழுவிக் கொள்ளத் தயார். ஆனால் இந்த மாதிரிப் பிரமோஷன் எனக்கு வேண்டவே வேண்டாம். இந்தப் பிரமோஷன்களெல்லாம் உங்களைப் போன்றவர்களுக்கே இருக்கட்டும்!'' என்றான்.

இதற்குள் ஸர்க்கிள் இன்ஸ்பெக்டரும் டிபுடி ஸுபரின்டென்டும் அங்கே வந்து சேர்ந்தார்கள். ரமாநாத் அங்கே நிற்பதைக் கண்டதும் ஸர்க்கிள், "அட!

ரமாநாத் பாபுவா? எங்களுக்கு முன்னாலேயே தயாராக வந்து நிற்கிறீர்கள் போலிருக்கிறதே! பேஷ்! உங்களைப்போல் அல்லவா காரியத்தில் கண்ணும் கருத்துமா யிருக்க வேண்டும்!'' என்றார்.

தனது தன்மை — நிலைமைகளைத் தானே உணர்ந்து கொண்டுவிட்ட பாவனையில் ரமாநாத், ''ஆமாம் ஸார்! எனக்கு இந்தப் பொய்ச் சாட்சி சொல்லும் காரியத்தில் ரொம்பக் கண்ணும் கருத்தும்! அதனால் தான் உங்களுக்கு முன்னாலேயே வந்து நின்று கொண்டிருக்கிறேன். இவ்வளவு நாட்கள் உங்கள் சொற்படி ஆடினேனே, அதுவே போதும்! இனிமேல் என் நன்மை நிலைமைகளை நானே பார்த்துக் கொள்ளுகிறேன். உங்களுக் கெல்லாம் வீணில் சிரமம் தருவானேன்!'' என்று ஊசி கொண்டு குத்துவது போலச் சொன்னான்.

இச் சொற்களைக் கேட்டதும் ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர், ஸப் இன்ஸ்பெக்டரின் முகத்தைப் பார்த்தார்; ஸப் இன்ஸ்பெக்டர் டிபுடி சூபரின்டெண்டின் முகத்தைப் பார்த்தார். அவர்கள் அப்படி ஒருவருக் கொருவரைப் பார்த்துக் கொண்ட காட்சி கோவில்களில் உள்ள நவக்கிரஹங்களை நினைவுறுத்தியது. ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர் ஒன்றும் புரியாமல் திகைத்துப் போய், ''என்ன விஷயம்? இவர் இப்படி யெல்லாம் பேசுகிறவர் அல்லவே, ஏதோ கோபம் போலிருக்கிறது!'' என்றார்.

''நிரபராதிகளைக் கொலை செய்யும் பாவத்தை நான் ஏற்றுக் கொள்ளத் தயாரா யில்லை. ஆகையால், சாட்சியத்தை மாற்றிக் கொண்டுவிடுவது என்று நான் தீர்மானித்து விட்டேன்'' என்று ரமாநாத் திட்டமான குரலில் சொன்னான். (தொடரும்)

# காலக்ஷேபம்

### நியாயந்தான்!

''என்ன ஜோஸ்யர்வாள், நேற்றைக்கு இரண்டு ரூபாய் கொடுத்துவிட்டுக் கேட்ட போது இந்த ஜாதகனுக்கு 35 வயசு என்று சொன்னீர்கள். இன்றைக்கு ஐந்து ரூபாய் கொடுத்துக் கேட்டால் 75 வயசு என்கிறீர்களே, எது சரி? எது தப்பு?''

''இதென்ன கேள்வி? கொஞ்சமாய்க் கொடுத்தால் சுருக்கிச் சொல்லுவேன்; தாராளமாய்க் கொடுத்தால் அதிகமாய்ச் சொல்லுவேன் என்று உங்களிடம் நான் அப்போதே சொன்னேனே!''



### வந்தனமா?

குமாஸ்தா (மானேஜரிடம் சென்று):— ஸார்! நாளைக்குச் சாயங்காலம் கொஞ்சம் சீக்கிரம் வீட்டுக்குப் போக உத்தரவு கொடுப்பீர்களா? என் மனைவி துணிக் கடைக்குப் போகவேண்டும் என்கிறாள்.

மானேஜர்:—முடியவே முடியாது. நாளைக்கு நிறைய வேலை யிருக்கிறது.

குமாஸ்தா:—உங்களுக்கு ரொம்ப வந்தனம், ஸார்! நீங்கள் அப்படிச் சொல்ல வேண்டும் என்றுதான் நான் எதிர்பார்த்தேன்!



### சரிதான்!

தாய்:—எப்பொழுது பால் பொங்குகிறது என்று பார்த்து என்னிடம் சொல்லும்படிச் சொல்லி யிருந்தேனே, ஏன் சொல்லவில்லை?

பெண்:—சொல்ல மறந்து விட்டேன்; சரியாக எட்டு மணிக்குப் பொங்கியது!

### சரியான கணக்கு!

'சென்ஸஸ்' உத்தியோகஸ்தர்:—ஐயா, 'பெற்றோர்கள் உயிருடனிருந்தால் அவர்கள் வயது' என்ற பத்தி பாக்கி யிருக்கிறது. அவர்களுக்கு என்ன வயது இருக்கும்?

காட்டுப்புற வாசி:—கொஞ்சம் பொறுங்கள். கணக்குப் பார்த்துச் சொல்லுகிறேன்......... நூற்று இருபத்திரண்டு இருக்கும்.

உத்தியோகஸ்தர்:—என்ன, என்ன!

காட்டுப்புற வாசி:—ஆமாம், அவர்கள் இறந்து 42 வருஷமாகிறது. எண்பதாவது வயதில் இறந்து போனார்கள். அவர்கள் 'உயிருடனிருந்தால்' இப்பொழுது 122 வயது ஆகாதா?



### நல்ல சந்தேகம்!

எதிர் வக்கீல்:—பிரதிவாதிதான் உமது வண்டியைத் திருடினான் என்று உம்மால் நிச்சயமாய்ச் சொல்ல முடியுமா?

வாதி:—நீர் குறுக்கு விசாரணை பண்ணும் வரையில் அப்படித்தான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் இப்பொழுது அந்த வண்டி என்னுடையதுதானா என்றே சந்தேகம் வந்துவிட்டது.



### பதில் எப்படி?

''உன் அப்பா பாங்கியில் காஷியர் என்கிறாய், உன்னிடம் காசையே காணோமே!''

''உன் தகப்பனார் பல் வைத்தியரா யிருக்கிறார், உன் பாட்டியின் வாயில் ஒரு பல்லையும் காணோமே!''

# “இதோ இவர் தான் ஆனந்த் மிஸ்ரா...

இப்போதுதான் ஆபீசிலிருந்து வீடுதிரும்புகிருர். நல்ல டீ ஒரு கோப்பை சாப்பிட விழைகிருர். ஆனல் பாவம், அது கிடைக்காது. ஏனென்றால் கெட்டிலில் காய்ந்து கொண்டிருக்கும் வெந்நீர் தான் பூராவும் காய்ந்து கொண்டேயிருந்தது. நல்ல தேயிலை பானத்துக்கு புதிதாகக்கொதித்த நீரே தேவை.





கோடிக்கணக்கான மக்கள் சோர்வை மாற்றி புத்துணர்ச்சிபெற தேயிலை பானம் அருந்துகின்றனர். ஆனல் தேயிலை பானம் அருந்தும் பலருக்கு நல்ல டீ எப்படி செய்வதென்பது தெரியாதது வருந்தத்தக்கது. நல்ல டீ தயாரிக்க செலவு ஏதும் அதிகமில்லை. ஐந்து சுலபமான முறைகளைக் கடைப்பிடிப்பதே போதுமானது. உங்கள் பணத்திற்கு முழு மதிப்பு பெறவும் உங்கள் டீ நறுமணம் மிகுந்ததாயிருக்கவும் இம்முறைகளை உங்கள் மனதில் பதியவைத்து வீட்டிலும் சரிவர அனுசரிப்பது நலம்.

ஐந்து விதிகள்.

சுலபமான

1. எப்போதும் புதிதாக எடுத்த நல்ல தண்ணீரை புதிதாக கொதிக்கவைத்தே உபயோகிக்கவும். 2. பாத்திரத்தை ... 3. நல்ல தேயிலையை ... போடவும். 4. ... 3 முதல் 5 ... 5. ...

“தேயிலைப்பானம் - ஒரு போஷணை” எனும் இலவச புத்தகம் ... தமிழ்ப்பிரதி ... கிடைக்கும். இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டு, 101, ... போஸ்ட் பாக்ஸ் 2172, கல்கத்தா.





லிப்டன்ஸ்

என்றால்

முதல்தரமான

டீ




LTK-1326-TM



நீங்கள் கையாளும்
ரூபாய் நோட்டுக்களிலிருக்கும்
அழுக்கினாலும் கிருமிகளாலும்
அபாயம் ஏற்படும்!




லைப்பாய் சோப்பினால் அடிக்கடி
சுத்தம் செய்துகொள்ளுங்கள்!

# லைப்பாய் சோப்

அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து
உங்களைக் காப்பாற்றுகிறது

L. 97-111 TM

